# கொங்கு மலைவாசிகள்

(பயண ஆராய்ச்சி நூல்)

மானிட இயல் அறிஞர்
டாக்டர் பிலோ இருதயநாத்

தென்றல் நிலையம்
12 பி, மேலசன்னதி
சிதம்பரம் - 608001.



## நூல் விவர அட்டவணை

| | |
|---|---|
| நூலின் பெயர் | : கொங்கு மலைவாசிகள் |
| பொருள் | : பயணநூல் |
| ஆசிரியர் | : டாக்டர் பிலோ இருதயநாத் |
| தென்றல் வெளியீட்டு எண் | : 43 |
| பதிப்பாண்டு | : முதல்பதிப்பு, 2 அக்டோபர், 2004 |
| நூலின் அளவு | : கிரவுன் |
| தாள் | : 11.6 முழு |
| மொத்தப் பக்கங்கள் | : 88 |
| **விலை** | : **ரூ. 25.00** |

---

கிடைக்குமிடம் :

**மணிவாசகர் நூலகம்**

12-B, மேல சன்னதி, **சிதம்பரம்** - 608 001.

31, சிங்கர் தெரு, பாரிமுனை, **சென்னை** - 600 108.

5, சிங்காரவேலுதெரு, பாண்டிபஜார், **தி. நகர், சென்னை** - 600 017.

110, வடக்கு ஆவணி மூல வீதி, **மதுரை** - 625 001.

15, ராஜ வீதி, **கோயமுத்தூர்** - 641 001.

28, நந்தி கோயில் தெரு, **திருச்சி** - 620 002.

தொலைபேசி :

| | |
|---|---|
| **சிதம்பரம்** | : **230069** |
| **சென்னை** | : **25361039** |
| **தி. நகர்** | : **24357832** |
| **மதுரை** | : **2622853** |
| **கோயமுத்தூர்** | : **2397155** |
| **திருச்சி** | : **2706450** |

---

அச்சிட்டோர் : மணிவாசகர் ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை - 600 021,
தொலைபேசி : 25954528

# முன்னுரை

இதுவரையில் என்னால் எழுதப் பெற்றுள்ள பல நூல்களில் ஒவ்வொன்றையும் எழுதுவதற்கு நான் எடுத்துக்கொண்ட முயற்சியைப் பார்க்கிலும், இந்நூலை எழுதுவதற்கு நான் எடுத்துக் கொண்ட முயற்சி மிகுதியாகும்.

இந்த நூலை ஒரு முறை முற்றிலும் படிப்போர் எவரும், 'இது அரிய உழைப்பின் பயன்' என்று கூறுவரென்னும் நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

கல்வெட்டுகள், தமிழ் வரலாறு, பாடல்கள், நாடோடிப் பாடல்கள், சில செவிவழி (கர்ண பரம்பரை)ச் செய்திகள், பல சொற்கள், பல மொழிகள் ஆகிய இவைகளின் துணைகொண்டு இந்த நூலை எழுதினேன். இந்த நூலில் காணப்படும் வரலாறுகளில் உள்ள செய்திகள் ஒவ்வொன்றும் பற்பல ஆண்டுகளில் நீலகிரிக்குச் சென்று-கொஞ்சம் கொஞ்சமாக-அந்தந்த ஏழு ஊர் கோகாலுக்குச் சென்று(கோகல்-அவர்கள் வாழும் ஊர்களுக்குப் பொதுவான பெயர்) தொகுத்து எழுதியவை.

வரலாற்றை எந்த அளவுக்கு மூடுபனிபோல், பாசிமூடி இருக்கிறது என்பதை இந்நூலைப் படிக்கும் அன்பர்கள் தெரிந்து கொள்வார்கள். கடந்த முப்பதாண்டுகளாக எந்தப் பலனையும் எதிர்பார்க்காமல் செய்த தொண்டுகள், இன்று பல நூல்கள் எழுதவும், கட்டுரைகள் எழுதவும், பல தமிழ்ச் சங்கங்களில் பேசவும் எனக்கு உதவியாக இருக்கின்றன.

பத்திரிகைகளின் பேரன்பு மிக்க ஆசிரியர்கள் காட்டிய அன்பும், செய்த பெரிய உதவியுமே, என் உயிருக்கு அஞ்சாமல்

பெரிய காடுகளுக்குள் நுழையத் துணிவையும் விடா முயற்சியையும உண்டாக்கின.

சில நண்பர்கள், "காடுகளுக்கொல்லாம் நீங்கள் எப்படிப் போகிறீர்கள்? உண்மையாகவே போகிறீர்களா? அல்லது மற்றவர்களைப் போல் "டூப்" விடுகிறீர்களா?" என்று கேட்டதுண்டு. அவ;ர்களில் ஒருவர் என் தெருவில் என்னுடன் பல்லாண்டுகளாக வாழுபவர். அவர்களை நான் ஓய்வான நேரத்தில் என் இல்லத்திற்கு வருமாறு அழைத்தேன். அவர்களும் வந்தார்கள். மற்றவர்களால் எழுதப்பட்ட செய்திகளையுடைய என் குறிப்பு ஏடுகளை அவருக்குக் காட்டினேன். அவர் வெட்கித் தலைகுனிந்தார்.

என் உறவினர்களே என்னிடம் ஐயுறக் காரணம் என் ஏழ்மைநிலைதான், சிலர் என்னிடம், என்னுடைய "ஜீப்", "துப்பாக்கி" முதலியவை எங்கே என்றும் கேட்பதுண்டு. அவர்களுக்கு, "இதுதான் என் ஜீப்" என்று இரண்டு விளக்குகள் வைக்கப்பட்ட என் சைக்கிளையும், "இதுதான் என் துப்பாக்கி" என்று நான் கையில் காடுகளுக்கு எடுத்துச் செல்லும் தடியையும், "இவர்தான் என்னுடன் வரும் தைரியமுள்ள நண்பர்" என்று நான் ஜெபம்செய்யும் ஜெபமாலை மணியையும் எடுத்துக் காட்டுவேண். "மனமிருந்தால் மார்க்கமுண்டு." எந்தப் பற்றுமில்லாதவனாய், எந்த உணவையும் விருப்புடன் சாப்பிட மனமுள்ளவனாய், கிடைத்ததே போதும் என்று நிறைவுடையவனாய், உள்ளத்தை மாற்றிக்கொண்டால் எங்கும் பயணம் செய்யலாம். சிலர் என் பயணத்தைப்பற்றி நம்பாமல் என் இல்லத்திற்கு வந்து நான் சேகரித்து வைத்திருக்கும் பொருள்களையெல்லாம் பார்த்ததுடன், நான் வைத்திருக்கும் ஆதாரங்களையும் ஆயிரக்கணக்கான புகைப்பட நெகட்டிவ்களையும் கண்டு, ஐயப்பாடு தீர்ந்து திரும்பிப்

போகும் பொழுது, "இது என் அன்பளிப்பு. இன்னும் ஏதாவது ஓர் ஊருக்குப் போக வைத்துக் கொள்ளுங்கள்" என்று, நான் "வேண்டாம்" என்று தடுத்தாலும், "நீங்கள் எனக்குக் கொடுத்த உங்கள் நூலின் விலை இது" என்று கொடுத்துவிட்டுப் போகும் பொழுது நான் அதைத் தடுத்துக்கூற இயலாதவனாய் நன்றியுடன் வாங்கிக் கொண்டு அவர்கள் நினைவாக ஏதாவது ஒரு மலைக்கோ காட்டுக்கோ போவதுண்டு.

சில ஆண்டுகளுக்கு முன் பூனா, பம்பாய், மலோடி வடக்கே சில இடங்களுக்குச் செல்ல வேண்டும் என்ற எண்ணமிருந்தது. ஆனால் பூனாவுக்கு மட்டும் போனாலும் போதும் என்ற எண்ணம் கடைசியில் உண்டாயிற்று. ஆம்! பூனாவுக்குச் செல்ல வேண்டும். ஆனால் பயணச் செலவுக்கு என்ன செய்வதென்ற கவலையில் இரண்டு ஆண்டுகள் வரை ஓடிவிட்டன. என் எண்ணத்தைப் பல நண்பர்களிடமும், பத்திரிகை முதலாளிகளிடமும் கூறினேன். அவர்கள் செய்த உதவியால் சில ஆண்டுகளுக்கு முன் பூனாவில் சில வாரங்கள் தங்கி பல மலைவாசிகளையும், அங்கு வரலாற்றுத் தொடர்பான பல இடங்களையும், கோட்டைகளையும், குகைகளையும் கண்டுகளித்தேன். நான் எந்தெந்த ஊர்கள் போகிறேனோ அந்தந்த ஊர்களிலிருந்து பல பத்திரிகை ஆசிரியர்களுக்குக் கடிதம் எழுதுவதுண்டு. அந்தந்த ஊர்களில் கிடைத்த அருமையான காட்டுப்பொருள்களையும், மலைவாசிகள் பயன்படுத்தும் பொருள்களையும் கொண்டு வந்து பல பத்திரிகை ஆசிரியர்களின் அலுவலகங்களில் காட்டியும் இருக்கிறேன். அவர்கள் பாராட்டுகள் எல்லாம் என் குறிப்பு ஏட்டில் இடம் பெற்றிருக்கின்றன. இவைகளை நான் ஏன் எழுதுகிறேன் என்றால், "ஒற்றைத் தமிழனால் இப்படிக் காடுகளுக்குப் போய்வர முடியுமா?" என்ற எண்ணத்தை சிலருடைய உள்ளத்திலிருந்து நீக்கவேயாகும்.

டாக்டர். **பிலோ இருதயநாத்.**

# பொருளடக்கம்

## நீலமலைப் பகுதிகள்

நெடுங்காலத்திற்கு முன்பிருந்தே தமிழ்நாட்டின் மேற்கிலுள்ள இந்த நீலகிரி (நீலமலை) இப்பெயருடன்தான் வழங்கி வருகிறது. மிகவும் குளிராய் இருந்தபடியால் முன்னாளில் யாரும் இம்மலைப் பகுதியை விரும்பவில்லை. காலம் செல்லச் செல்ல தட்ப வெப்பநிலை சீரடைந்த பிறகு மக்கள் வந்து குடி புகுந்தார்கள்.

போர்த்துக்கல் நாட்டுப் பாதிரிமார்கள், ஜெசியூட் அல்லது சேசுசபைப் பாதிரிமார்கள் 16-ஆம் நூற்றாண்டில் இங்கு வந்தார்கள். அக்காலத்தில் நீலகிரி மைசூர் அரசரின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. 17-ஆம் நூற்றாண்டில் ஹைதர்-திப்பு ஆகிய முகம்மதிய அரசர்களின் கீழ் இருந்தது. இதற்குப் பல வரலாற்றுச் சான்றுகள் உள்ளன.

மேல் குந்தா (இங்கு இப்போது நீர்மின் உற்பத்திக்கு அணை கட்டியிருக்கின்றனர்) கிராமத்தில் திப்புவின் சிறைக் கைதிகள் அடைக்கப்பட்ட சிறையின் அழிந்த பல பாகங்கள், ‘ஜெயில் தோட்டம்’ என்ற பெயரில் இருக்கின்றன. உலிக்கல் மலைக்குப் பக்கத்திலுள்ள ‘டூருக்’ என்னும் மலைக்கோட்டையையும் இன்றும் காணலாம். 1799-ஆம் ஆண்டு நீலகிரி ஆங்கிலேயருடைய நேராட்சிக்கு உட்பட்டாலும், அடிவாரத்தில் ஏற்படும் மலைக்காய்ச்சலுக்கு அஞ்சி ஒருவரும் அங்குக் குடியிருக்கச் செல்லவில்லை. 1818-ஆம் ஆண்டு வரை இந்த இடத்தைப் பார்வையிடவும் யாரும் செல்லவில்லை. கோவை மாவட்ட உதவிக்கலெக்டர்கள் திரு. உஷ், திரு. கிண்டர்லி என்னும் இருவர் நீலகிரிக்குச் சென்றதாக வரலாறு கூறுகிறது. புகையிலையைக் கள்ளத்தனமாக விற்பனை செய்தவர்களைப்

பிடிப்பதற்கோ, வேட்டையாடவோ, நாடுகளைப் பார்ப்பதற்கோ அவர்கள் சென்றிருக்கலாம் எனக்கருதப் படுகிறது. அவர்கள் (சிறுமுகை) ஸ்ரீமுகை வழியே கோத்தகிரி சென்றார்கள். பிறகு நீலகிரியைப் பற்றிய செய்திகளைக் கலெக்டர் திரு. சால்வனுக்குத் தெரியப்படுத்தினார்கள். ஆகையால், அவர்கள் 1819-இல் ஒரு சிறு கூட்டத்தார்களுடன் தனநாயக்கன் கோட்டை வழியாக-தேனாடு சென்று கோத்தகிரிக்கு அருகில் உள்ள திம்பட்டி என்னும் இடத்தில் கூடாரம் போட்டார்கள். மேட்டுப்பாளையத்து அடிவாரம் போல மலைக் காய்ச்சல் உள்ள இடமாயில்லாமல்-இனிய இடமாக இருப்பதைக் கண்டு திரு. சால்வன் துரை திம்பட்டியில் தங்குவதற்கு ஒரு பங்களாவைக் கட்டினார். அந்தப் பங்களாவை இன்றும் காணலாம். அது இன்று மூடிக்கிடக்கிறது. அக்கால பங்களா என்பது ஒரு பெரிய மோட்டார் ஷெட் போல் இன்று காட்சி அளிக்கிறது.

பிறகு திரு. சால்வன் துரை தம் வசதியை முன்னிட்டு சிறுமுகை திம்பட்டி வரை பாதை அமைத்துச் சீர்திருத்தம் செய்ய கம்பெனியாரின் உத்தரவு பெற்றார். பிறகு சேலம், கோவை முதலிய இடங்களிலிருந்த சிறைக் கைதிகளைக் கொண்டு நல்லதோர் பாதை அமைத்தார். அதன் பின்னர் சென்னை மாநில அரசாங்கத்தாருக்கு எழுதியபோது ஆங்கிலேயர்களுக்கு ஏற்ற கோடைக்கால உறைவிடம் 'நீலகிரி' என்றும், அதற்கு ஏற்ற வசதிகள் செய்ய வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார். முதன்முதலில் கோத்தகிரியிலும், திம்பட்டியிலும் பெரிய பெரிய பங்களாக்கள் கட்டி சில ஆங்கிலேயர்களுக்குப் பணிவிடை செய்யச் சில பணியாளர்களும் அங்கே குடிபுகுந்தார்கள். அந்த ஆங்கிலேயர்களில் சிலர் ஏறத்தாழ இருபது மைல் தொலைவிலிருக்கும் உதகமண்டலத்தையும் போய்ப் பார்த்து வந்தார்கள். பிறகு திரு. சால்வன் துரையே உதகையைப் பார்வையிட்டு, உதகையில் முதன் முதலில் 1818-இல், ஒரு கல் பங்களாவையும் பல கட்டடங்களையும் கட்டுவித்தார். சிங்காரத் தோட்டத்தையும் (இளமரக் கா) அமைத்தார்.

பீடபூமிப் பக்கங்களில் இருந்து பார்ப்பதற்கு இந்த மலை நீலநிறமாகத் தோன்றியதால் இதற்கு 'நீலகிரி' என்ற பெயர் ஏற்பட்டதாகும். நீலகிரி ஏறத்தாழ 35 மைல் நீளமும் 20 மைல் அகலமும், ஏறத்தாழ 700 அடி உயரமும் உள்ளதாகும். மேற்குத் தொடர்ச்சி மலையும் கிழக்குத் தொடர்ச்சி மலையும் ஒன்று சேருமிடத்தில் நீலகிரி உள்ளது. அப்போது இது தமிழ்நாட்டில் உள்ள எல்லா மாவட்டங்களையும் விட மிகச் சிறியதாக இருந்தது. (தற்போது தமிழ்நாட்டிலேயே மிகச்சிறிய மாவட்டம் கன்னியாகுமரியாகும்.) இதன் பரப்பு 957 சதுர மைல். நீலகிரியின் மக்கள் தொகை 1951-ஆம் ஆண்டு 311729; 1961 ஆம் ஆண்டு 409440; இந்த பத்து ஆண்டில் கூடுதல் 977111. நீலகிரி மாவட்டத்தின் தலைநகரம் உதகமண்டலம்.

மேற்குத் தொடர்ச்சி மலையிலுள்ள சிகரங்களில் மிகவும் உயரமான சிகரம் 'தொட்ட பெட்டா.' இது உதகைக்குக் கிழக்கில் கடல் மட்டத்திற்கு மேல் 8760 அடி உயரத்தில் உள்ளது. ஆனைமுடி சிகரம் என்பது, இந்த மலைக்குத் தெற்கில் கேரளாவைச் சார்ந்த பகுதி. ஆனால், உதகமண்டலப் பகுதியிலேயே உயரமான சிகரம் தவிர, 8299 அடி உயரமுள்ள சினோடன் சிகரமும் 8030 அடி உயரமுள்ள கிளப் குன்றுகளும் 8030 அடி உயரமுள்ள எல்க் குன்றுகளும் உள்ளன. உதகமண்டலத்தில் கடல் மட்டத்திலிருந்து 7228 அடி உயரமான ஓர் ஏரி எழில்மிக்க காட்சி அளிக்கிறது. மேலும், நீலகிரியில் பல அழகிய நீர் வீழ்ச்சிகள் இருக்கின்றன. அவைகளுள் 250 அடி உயரத்தில் உள்ள 'காத்தரீன்' நீர் வீழ்ச்சியும், 180 அடி உயரத்தில் உள்ள 'காட்டேரி' நீர் வீழ்ச்சியும், 400 அடி உயரத்தில் உள்ள 'கொலக் கம்பை' நீர் வீழ்ச்சியும், கடல் மட்டத்திலிருந்து 7512 அடி உயரத்தில் உள்ள 'பாய்க்காரா' நீர் வீழ்ச்சியும் முக்கியமானவை.

நீலகிரி மாவட்டம் 1799-ஆம் ஆண்டு கிழக்கு இந்தியக் கம்பெனியாருக்குக் கொடுக்கப்பட்டது. ஆங்கிலேயர்கள்

திப்பு சுல்தானோடு மைசூர்ப் போர் செய்தபின் அது கிடைத்தது. நீலகிரி 1799-ஆம் ஆண்டு கிடைத்தாலும், 1819-ஆம் ஆண்டு வரை எந்த ஐரோப்பியரும் நீலகிரிக்குச் சென்று தங்கவில்லை. 1812-ஆம் ஆண்டு முதன்முதலாகச் சில ஆங்கிலேயர்களும், அவர்களுக்கு உதவியாகச் சர்வேயர் ரெவாண்டு வில்லியம் கேஸ் என்பவரும் அவருக்கு உதவியாக திரு. 'மாக்மாஹோ என்பவரும் நீலகிரி அடிவாரப் பீட பூமியில் சென்று தங்கினார்கள். 1819-ஆம் ஆண்டு மே மாதம் திரு. சால்வன் துரை நீலகிரியில் இருபது நாட்கள் முதன் முதலாகத் தங்கினார். அதனால் அவர் தாமே உதகமண்டலத்தை முதன்முதலில் கண்டு பிடித்ததாகக் கூறிக்கொண்டார்.

ஆனால் நீலகிரியைப் பற்றிச் சங்ககால நூல்களில் இரண்டாயிரமாண்டுகளுக்கு முன்னரே கூறப் பட்டுள்ளது என்பதும்., இவர்களுக்கு முன் சேரன் செங்குட்டுவன் நீலகிரி மலையில் பாடி அமைத்துத் தங்கினான் என்பதும், கண்ணகி சிலைக்குக் கல்லெடுக்க இமயத்துக்குப் போகுமுன் நீலகிரியில் தங்கினான் என்பதும் அந்த ஆங்கிலேயனுக்கு எப்படித் தெரியும்? அவர் அதனை மறுகண்டுபிடிப்புச் (Rediscovery) செய்ததாக வேண்டுமானால் கூறிக்கொள்ளலாம்.

1822-ஆம் ஆண்டு 'கல் பங்களா' வை திரு. சால்வன் துரை கட்டினார். தற்காலத்தில் அது அரசாங்க அலுவலகமாகப் பயன்படுகிறது. திரு. சால்வன் துரையின் ஊக்கத்தாலும் உழைப்பாலும், தன்னம்பிக்கையாலும் உதகமண்டலம் நீலகிரியின் தலைநகரமாகவும், சென்னை அரசாங்கத்தார்களுக்குக் கோடைக்கால உறைவிட மாகவும் பயன்பட்டு வந்தது. 1824-ஆம் ஆண்டு திரு. சால்வன் துரை அரசாங்கத்தாரின் ஆணை பெற்று, உதகமண்டலத்திலுள்ள ஏரியை வெட்டினார். பின்பு 1826-ஆம் ஆண்டு சர். தாமஸ் மன்றோ என்ற ஆளுநர் முதன் முதலாகக் 'கல் பங்களா'வில் திரு. சால்வன் துரையைச் சந்தித்தார். சர். தாமஸ் மன்றோ 1827-ஆம் ஆண்டு கர்நூலில் இறந்து விடவே, கனம் ஸ்டூவன்

ராம்போல்ட் வாஷிங்டன் என்பவர் மிகவும் உழைத்து உதகையைக் குடியிருப்பு நகரமாக்கினார். 1892-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 23-ஆம் தேதி வாஷிங்டன் உதகையில் நடந்த வேலைகளை நேரில் கவனித்தார். அப்பொழுது செயிண்ட-ஸ்டீவன்ஸ் கோவிலுக்கு அடிக்கல்லை நாட்டினார். ஆகையால் அக்கோவிலுக்கு அப்பெரியாரின் பெயரே வைக்கப்பட்டது. அந்தக் கோவிலுக்கு வேண்டிய உயர்ந்த ரக உத்திரங்கள், தூண்கள் முதலியவை எல்லாம் திப்பு சுல்தானது ஸ்ரீரங்கப்பட்டண அரண்மனையிலிருந்து கொண்டு வரப்பட்டன. அத்தூண்கள் யாவும் உயர்ந்த தேக்கு மரத்தால் செய்யப்பட்டவை. பிறகு அதன் மேல் பலவித வர்ணங்கள் பூசப்பட்டதால் இன்று அவை உயர்ந்த கற்களைப் போல் தோன்றுகின்றன. அதன் செலவு (அக்கால மதிப்புப்படி) ரூபாய் 8000க்கு மேல் இருக்கக் கூடாதென்று உத்தரவு வந்தது. ஆனால் 1831-ஆம் ஆண்டு வரை ரூபாய் 24000 அரசாங்கம் செலவு செய்தது. உதகை சிங்காரத் தோட்டத்திற்கு மேலிருக்கும் அரசாங்கப் பங்களா கட்டி முடிக்க நான்கு ஆண்டுகள் ஆயின. கட்டச் செலவான தொகையோ ரூபாய் 7,80,000. 1867-ஆம் ஆண்டு ஆர்ச். தாமஸ் கோவிலை ரூபாய் 63,000 செலவு செய்து கட்டினார்கள். அப்பொழுது சென்னை மாநில ஆளுநராக இருந்த வில்லியம் பாட்ரிக் ஆதாம் உதகையில் இறந்து விட்டதால் சென்ட் தாமஸ் கல்லறை மயானத்தில் அவருடலைப் புதைத்தார்கள்.

நீலகிரியில் மேட்டுப் பாளையத்திலிருந்து குன்னூர் வரையிலும், 49 இலட்சம் ரூபாய் செலவு செய்து (இது அக்காலப் பண மதிப்பு; இக்காலத்தில் பல கோடிகள் ஆகும்.) 1819-ஆம் ஆண்டு மலை ரயில் பாதை போடப்பட்டது. நீலகிரி மலை ரயில் பாதை பார்ப்பதற்குப் புதுமையாக இருக்கும்.

நீலகிரியில் மூன்று வட்டங்கள் (தாலூகாக்கள்) இருக்கின்றன. அவை : (1) உதகமண்டலம் (2) குன்னூர் (3) கூடலூர். உதகையில் முதன் முதலில் வசித்த

ஆங்கிலேயர் திரு. சால்வன் துரை அவர்கள்தாம். உதகையிலிருக்கும் கல் பங்களா 1827-1834 வரையில் ஐரோப்பியப் படைத்தலைவர், உடல் நிலை சீர்குலைந்தவர்கள் ஆகியோருக்கு ஓய்வு நேர விடுதியாகப் பயன்படுத்தப்பட்டது.

1845-ஆம் ஆண்டு சமையலுக்குக் காய்கறித் தோட்டமாகத் தொடங்கிய 'கவர்மெண்ட் சிங்காரத் தோட்டம்' (Government Botanical Gardens) அக்காலத்தில் காய்கறிகள் பயிரிட்டு ஐரோப்பியர்களுக்கு நியாயமான விலைக்குக் கொடுப்பதற்கு ஏற்பாடானது. அக்காலத்தில் சென்னை மாநில ஆளுநராயிருந்த வீஸ்டு விட்டேல் தம் சொந்தப் பணத்தில் ரூபாய் ஆயிரம் கொடுத்து, தேர்ந்த ஒரு தோட்டக்காரனை நியமித்து அதனைக் கவனித்து வந்தார். அன்று அந்த நிலம் சதுப்பாகவும், காட்டு விலங்குகள் வசிக்கும் இடமாகவும் இருந்தது. அதைச் சீர்படுத்தி இப்பொழுதுள்ள அழகான தோட்டமாகச் செய்தார்.

இந்தச் சிங்காரத் தோட்டத்திற்கு மேல் பகுதியில் 'கவர்மெண்ட் பங்களாவை' 1879-ஆம் ஆண்டு டியூக் பக்கிங்ஹாம் சென்னையில் ஆளுநராக இருந்தபோது கட்டினார். 1879-ஆம் ஆண்டு அவரே அங்கே சென்று தங்கினார். அதில் உள்ள பொருள்களும் கட்டடச் செலவும் சேர்ந்து (பழைய மதிப்பு) ரூபாய் 7,80,000 செலவானதாம். பிறகு சர் ஆர்தர் ஆவ்லக் என்பவரால் பால்ரூம் என்றதோர் தனி அறையை 1900-ஆம் ஆண்டு ரூபாய் 6000 (பழைய மதிப்பு) செலவில் கட்டினார். செயின்ட் ஸ்டீவன்ஸ் கோவிலில் 1930-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 5-ஆம்தேதி கல்கத்தா அத்தியட்சர் டர்னர் என்பவரால் சிலை நிறுவப்பட்டது.

இந்தக் கோவிலில் ரூ.6750 மதிப்புள்ள ஒரு வாத்தியப் பெட்டி இருக்கிறது.

உதகமண்டலத்திலிருந்து வடகிழக்கே ஆறு மைல் தொலைவு நடந்தால் 'தூனேரி' என்றதோர்

படகர்களுடைய பழைமையான கிராமத்தை அடையலாம். அங்கு ஒரு விந்தையான "ஆம்லட் அனிக் கோரி" என்ற கல் பாம்பு ஒன்று இருக்கிறது. அதன் நீளம் பத்து அடி. அகலம் ஓர் அடி; ஏதோ ஒரு பாம்பு, ஏதோ ஒரு சிறப்பான விழா நாளில் கல்லாக மாறியதாகக் கதை வழங்குகிறது.

மோயர் பள்ளத்தாக்கில் 'எல்பநாத்' என்னும் குடிசை காட்டிற்குள்ளிருக்கிறது. அந்த ஊர் 'ஹலீயட்டி' என்பதாம். அங்குள்ள நீர்வீழ்ச்சிக்கு 'குதிரை ஆலா' என்பது பழைய பெயர். ஆங்கிலேயர்கள் நீலகிரிக்கு வந்தபின், அந்த நீர்வீழ்ச்சிக்கு 'காத்தரீன் வாட்டர் பால்ஸ்' என்று பெயர் கொடுத்தனர். அந்த நீர்வீழ்ச்சியைப் பற்றி ஒருகதை கூறப்படுகிறது. அதாவது: "ஒரு படகர் தன் மனைவி தனக்கு முதல் தரமான உணவைப் பரிமாறிவிட்டு, தன் சகோதரனுக்கு இரண்டாம் தர உணவைப் பரிமாறினபடியால், அந்த அவமானம் தாங்காதவனாய், குதிரையின் மேல் சவாரி செய்தவாறே, அந்த நீர் வீழ்ச்சியில் விழுந்து மடிந்தானாம்."

உதகையிலிருந்து 13 மைல் தொலைவில் 'காண்டாஸ்' என்ற அடிவாரத்தில், 'அவலான்ச்' என்ற இடமிருக்கிறது. இங்கு ஒரு முசாபரி வீடும், ஒரு சத்திரமும், பணியாட்களுக்காக இரண்டு வீடுகளுமிருக்கின்றன. இங்கு உள்ளவர்கள் இந்த ஓடையில் மீன் பிடிக்கினற்னர். உதகையிலிருந்து எட்டு மைல் தொலைவில் வடக்கில் "கல்லட்டி" என்ற கிராமம் இருக்கிறது. கல்லட்டிக்கு ஒன்றரை மைல் தொலைவில் பாழடைந்த ஒரு மலைக்கோட்டை இருக்கிறது. கல்லட்டி ஒரு சிற்றரசனுக்குக் கீழ்ப்பட்டிருந்ததாயும், திப்பு சுல்தானுடைய காலத்தில் அதைக் கைப்பற்றினதாயும், வரலாறு கூறுகிறது.

நீலகிரி-குன்னூரிலிருந்து சுமார் மூன்று மைல் தொலைவில் 'அருவன்காடு' உள்ளது. இங்கே

பலவிதமான வெடி மருந்துகள் தயார் செய்யும் ஆலை இருக்கிறது. இதற்குள் யாரையும் உள்ளே போக அனுமதிப்பதில்லை. காட்டேரி நீர்வீழ்ச்சியின் நீர் மின்சார சக்தியால் மேற்படி ஆலையில் வேலை நடைபெறுகிறது. குன்னூருக்கு எதிரே 6000 அடி உயரத்தில் 'உலிக்கல்' என்ற பெயர் கொடுக்கப்பட்டது. இதற்கு ஒரு கதையும் உண்டு:

நெடுங்காலத்திற்கு முன் புலியைப் போன்ற ஒரு கொடிய விலங்கு மனித இனத்தவரை அடித்துக் கொன்று தின்று வந்ததாம். அதை துணிச்சல் மிகுந்த ஒருவன் கொன்று அதைப் புதைத்த இடத்தில் மூன்று கற்களை வைத்தானாம். அந்தக் காரணத்திற்காக இந்த இடத்திற்கு 'உலிக்கல்' அல்லது 'புலிக்கல்' என்ற பெயர் வந்ததாம்.

பண்டைக் காலத்தில் இந்தமலையில் 'பகாசுரன்' என்ற அசுரன் வசித்து வந்தானாம். அந்தக் கொடிய அரக்கனுக்குப் பக்கத்திலிருந்த கிராமத்தவர் ஒவ்வொரு நாளும் ஒரு மனிதனும் ஒரு வண்டிச்சோறும் படையலாகக் கொடுத்து வந்தார்களாம். அந்த நேரத்தில்தான் பஞ்ச பாண்டவர்களில் ஒருவனான பீமனுடைய முறை வந்ததாயும், பீமன் ஒரு வண்டிச் சோற்றுடன் பகாசுரனது மலைக்குப் போகும்பொழுது, எல்லாவற்றையும் வழியிலே தானே சாப்பிட்டு விட்டானாம். மிகுந்த சினமடைந்த பகாசுரன் பீமனுடன் சண்டைக்கு நின்றதாயும் இருவருக்கும் மற்போர் நடந்தது; கடைசியில் பகாசுரன் இறந்து விட்டதாயும் பகாசுரன் சாகும்பொழுது, "இங்குள்ளவர்கள் நச்சுக் காய்ச்சலால் சாகட்டும்!" என்று சபித்தானாம். அன்று முதல் இன்றுவரை அந்த பகாசுரன் மலைப்பகுதியில் நச்சுக் காய்ச்சல் பரவி இருக்கிறது என்பதையும் சிலர் செவிவழி உலவும் கதையைக் கூறுகிறார்கள்.

'மூக்கறுத்தி மலை' கடல் மட்டத்திலிருந்து 8,380 அடி உயரமுள்ள உன்னத சிகரம். இந்த மலை, பார்வைக்குப்

புதுமையான வடிவமுடையைதாகக் காணும். இம்மலைக்குக் கன்னட மொழியில் "அறுமூக்கு" என்று பெயர். இது தொடர்பாக இரு புராணக் கதைகள் வழங்குகின்றன.

1. இலங்கைத் தலைவனான இராவணனுக்குப் பீட பூமியிலிருந்தவர்கள் குறைவாக வரிப்பணம் கொடுத்தனர். ஆகையால், சினங்கொண்டு இராமருடைய நண்பர்களான அவர்களிடம் இராவணன் பகை கொண்டான். அப்பொழுது இராவணனுடைய தங்கையான இலங்கேஸ்வரி, அம்மக்களைச் சபித்தாள். மண்ணை வாரி இறைத்தாளாம். உடனே அம்மக்கள் இரு வகைப் புழுக்களாக மாறி விட்டனராம். இதையறிந்த இராமர் ஆத்திரமடைந்து இலங்கேஸ்வரியுடைய மூக்கை அறுத்து, அதை எல்லாரும் பார்க்கும்படி மலை மேல் வைத்ததாயும் கூறப்படுகிறது. அந்த மூக்கு மலைதான் இது என்பது கதை.

2. பழைய காலத்தில் பெண் குழந்தைகளைக் கொல்லும் பழக்கம் தோதுவர்களிடையே இருந்ததாம். ஒரு தோதுவப் பெண் தான் பெற்ற ஒரு பெண் குழந்தையைக் கொல்லாமல் வைத்திருந்ததால், அவள் சமூகக் கட்டளையை மீறினாள் என்று அவள் மூக்கை அறுத்து வைத்தனராம். அது இப்போது மலை முடியாகத் தோன்றுகிறதாயும் மற்றொரு கதை உலவுகிறது. தவலா (தவளைக்கோட்டை) உதகை-கூடலூரிலிருந்து (கூடலூர் வட்டம்) பத்து மைல் தொலைவிலுள்ளது. 1879-1882 இல் இங்குப் பொன் வெட்டி எடுத்தார்கள். இதற்கும் ஒருகதை உண்டு.

3. வயநாட்டிலிருந்து குறும்பிரநாத் என்ற அரசன் படையுடன் 'தவலா' என்ற இடத்திற்கு வந்தானாம். அங்கு 'வேதாஸ்', (வேடர்கள் அல்லது வேதர்கள்) என்னும் மக்கள் தங்களுடைய தலைவனுடன் வாழ்ந்துவந்தனர். குறும்பிரநாத் அரசன் படையுடன், இவர்கள் பொன் சேர்த்து வைத்திருந்த இடத்திற்கு வந்து எடுக்க முயற்சி செய்தான். 'வேதாஸ்' மக்கள் தாங்கள்

சேர்த்து வைத்த கருவூலங்களைச் செப்புத் தவலைகளில் போட்டு சுளிக் குளத்தில் மறைத்து விட்டனர். பிறகு குறும்பிரநாத் 'வேதாஸ்' மக்களைக் கொன்று விட்டானாம். தப்பிய சிலர் மைசூருக்கும் நிலம்பூர்க் காடுகளுக்கும் ஓடி விட்டனர். பிறகு குறும்பிரநாத் 'வள்ளுனவர்' என்பவருக்கு இந்நாட்டைக் கொடுத்து விட்டுப் போய்விட்டான். பல ஆண்டுகளுக்குப் பிறகு, வள்ளுனவர் மூன்று நாட்கள் பூசை செய்து, எல்லா மக்களுக்கும் விருந்து வைத்து, பிறகு யானைகளுடன் சுளிக் குளத்திலுள்ள கருவூலங்களோடு கூடிய தவலையை எடுக்க முயற்சி செய்தான். தண்ணீருக்கு மேல் கொண்டு வரப்பட்ட தவலை தவறி விழுந்து விட்டது. மூடி மட்டுமே கிடைத்தது. உடனே புயலும் மழையும் வரவே யாவரும் ஓடிவிட்டனர்.

அன்றிரவு இச்சுளிக் குளத்துக்குச் சென்ற அனைவரும் இறந்து விட்டனர். அன்று முதல் பொன்னை எடுக்க முயற்சி செய்பவர்கள் இறந்து விடுகிறார்கள் எனக்கூறப்படுகிறது. அன்று உதகை-கூடலூர் மார்க்கத்தில் வய நாட்டிலிருக்கும் ஆங்கிலேயருக்கே பொன்னைத் தேட அனுமதி இருந்தது. ஆனால் இன்று அரசாங்கம் அதைத்தேட முயற்சி செய்தால் நலமாக இருக்குமென நம்புகிறேன்.

# கோவ் மக்கள்

நீலகிரியில் ஏறத்தாழ முப்பதாண்டுகளாகப் பயணம் செய்தபோது ஏழு ஊர்க் கோவ் மக்களின் பஞ்சாயத்தில் அவர்கள் கூறிய சுவையான பல செய்திகளும், நேரில் கண்ட செய்திகளும் பின் வருபவை.

இன்று கல்வி கற்ற பல கோவ் மக்கள், தங்களின் வரலாறுகளைப் பற்றிக் கூறிய உண்மைகள் இவை. கற்ற தமிழர் தம் சடங்குகளைப் பற்றித் தமிழில் கூறும் போதே விளங்கிக்கொள்ள சற்றுக் கடினமாக இருக்கும் இந்தக் காலத்தில், அன்று தமிழ் பேசத் தெரியாத கோவ் மக்கள் கூறிய செய்திகளைத் தமிழன் தான் எந்த அளவில் பொருள் புரிந்து கொண்டானோ, அந்த அளவில் மீண்டும் அதை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துக் கூற, அதை ஆங்கிலேயன் தான் புரிந்து கொண்ட அளவுக்கு எழுதினான்.

அன்று எழுதிய ஆங்கிலப் புத்தகத்தை இன்று கல்வி கற்ற பல 'கோவ் மக்கள்' வாசித்து விட்டு, அந்த வரலாறுகளுக்கும் எங்களுடைய வரலாற்றுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்கின்றனர். அத்தனை செய்திகளும் தவறானவை என்று கூறுகிறார்கள்.

பதினைந்து ஆண்டுகளாகக் கொஞ்சம் கொஞ்சமாகக் கோவ் மக்களுடன் நீலகிரியிலேயே ஏறத்தாழ ஆயிரம் மைல்கள் மலைகளிலும் காடுகளிலும் சுற்றுப் பயணம் செய்து பல புகைப்படங்கள் பிடித்துள்ளேன். புகைப்படங்களில் நிற்பவர்கள் அந்தந்தப் பகுதியில் வாழும் கோவ் மக்களே.

நீலகிரி கோவ் மக்கள், பண்டைக்காலம் முதல் நீலகிரியில் வசித்து வருகிறார்கள். இவர்கள் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் இறைவனால் படைக்கப்பட்டு வாழ்ந்து வருகிறார்கள். அவ்விறைவனையே தாங்கள்

குலதெய்வமாக வழிபட்டு வருகிறாாகள். இவர்கள் எப்படிப் படைக்கப்பட்டார்கள் என்ற கேள்வி எழுகிறது. பார்ப்பதற்கே பரவசமளிக்கும் நீலநிறத்தோடு விளங்கும் நீலகிரியின் எழிலைக் கண்ட இறைவன் தற்பொழுது கோத்தகிரி என்ற இடத்தில் தோன்றி, தம் நெற்றியின் வியர்வையால், "ஓர் ஆணும் ஒரு பெண்ணும் உண்டாகக் கடவர்" என்று அருளினார். அன்று அவ்விறைவனால் படைக்கப்பட்ட மக்களே இன்று கோவ் - மக்கள். இதற்குச் சான்று, இவர்களின் மொழியும் இவர்களின் பல தொழில் செய்யும் வல்லமையுமாகும். ஆனால் நம் நாட்டில் ஒவ்வொரு தொழிலையும் ஒவ்வொரு குறிப்பிட்ட குலத்தினர்தாம் செய்கிறார்கள். ஆனால் கோவ் மக்களோ பல தொழில்களைச் செய்தாலும், 'எல்லாரும் ஒரே குலம்' என்ற மனப்பான்மையுடன் பெண் கொடுக்கல் வாங்கல் செய்கிறார்கள். இவர்களைத் தவிர மற்ற இனத்தில் எல்லாத் தொழிலும் செய்யக் கூடியவர்களை அன்று முதல் இன்று வரையில் காண முடியாது.

தவிர, இவர்களின் மொழியோ, இலக்கணமும் இலக்கியமும் இல்லாத பேச்சு மொழியாக மட்டும் உள்ளது. மேலும் மற்ற இனத்தவர் மொழியாலும், தொழிலாலும் பல இன மக்களாகப் பிரிக்கப்படு கின்றனர். ஆனால் கோவ் மக்களோ பல தொழில் செய்தாலும், எல்லோரும் ஒரே இன மக்களாகப் பாவிக்கப்படுகின்றனர். மேலும், இவர்களின் இனத்தவரை உலகில் எப்பகுதியிலும் காண முடியாது. இங்ஙனம் படைக்கப்பட்ட ஆணும், பெண்ணும் அப்பொழுது அவ்-ஆய்னோர் கோ-பாவை வணங்கி, 'கடவுளே! இப்படிப்பட்ட காட்டில் நாங்கள் எப்படி வாழ்வோம்? எங்களுக்கு வாழ வகையும் உண்ண உணவும் கொடுத்தருள வேண்டும்' என வேண்டினர். அப்பொழுது ஆய்னோர். "மக்களே! பசித்த பொழுது பாலமுதுடன் புசித்துப் பசியாற இதோ இந்தக் காமதேனுவை உங்களுக்குத் தருகிறேன். தவிர, கொடிய

விலங்குகளிடமிருந்து உங்களைக் காத்துக்கொள்ளும் பொருட்டு, இந்த வில்லையும் ஆதரவாகத் தருகிறேன். அத்துடன் பட்டாடையும், தலையில் அணியக் கிரீடமும் தருகிறேன். நீங்கள் என்னைப் புறக்கணித்து-பாவத்தை எப்பொழுது நாடுகிறீர்களோ அன்றே கிரீடத்தையும் காமதேனுவையும் இழந்து விடுவீர்கள். நினைவு இருக்கட்டும். சகல கலையும் கற்று, நீங்களே இந்த நீலகிரியில் வாழக் கடவீர்" என்று கூறி வாழ்த்தினார். "ஆய்னோரே! நாங்கள் எத்தருணத்தில் உம்மைக் காண விரும்புகிறோமோ, அப்பொழுது நீங்கள் காட்சி அளிக்க வேண்டும். தவிர தங்களிடமிருந்து பெற்ற வில்லை, நான் எப்பொழுது எங்கே தொடுகிறேனோ அது அத்திசையில் பாய்ந்து மறுபடியும் என்னையே வந்தடைய வேண்டும். தவிர, எதை உண்டாக்க வேண்டும் என்று நான் நினைக்கின்றேனோ, அது உண்டாக வேண்டும். எவைகளை அழிக்க வேண்டும் என்று நினைக்கிறேனோ அவைகள் அழிய வேண்டும். இத்தகைய சொல் வன்மையையும் தந்தருள வேண்டும்" என்று அவர்கள் வேண்டினர். அப்படியே எல்லாவற்றையும் அருளப் பெற்றார்கள். அன்று இவ்விதம் கட்டுப்பட்ட ஆய்னோர் கோ-பா, இன்றும் இந்தக் கோவ் மக்களின் சக்திக்குக் கட்டுப்பட்டுத்தான் இருக்கிறார்.

இன்றும் கோவ் மக்கள் தங்கள் குல தெய்வமாகிய கோபா ஆய்னோர்) கம்பட்டீசுவரனுக்கு ஆண்டுக்கு ஒரு முறை கோபா-பா கூடல் மாதத்தில் (ஜனவரி மாதம்) பிறைச்சந்திரன் தோன்றிய நாளிலிருந்து 15 நாட்கள் வரை பண்டிகை கொண்டாடுவார்கள். பிறைச்சந்திரனைக் காணும் நாளன்று இரவு சுமார் ஆறு மணிக்கெல்லாம் தங்கள் பரிசுத்த கொலுவால் மைதானத்தில் கோவ் மக்கள் எல்லாரும் கூடுவார்கள். அப்பொழுது தீக்கடை கோலைக் கொண்டு உண்டாக்கப்பட்ட நெருப்பை 'ஓம குண்ட நெருப்பு' என்று குறித்த இடத்தில் இடுவார்கள்.

அன்று முதல் பண்டிகை முடியும் 15 நாட்கள் வரையில் தூய்மையாகவும், நெருப்பை அவ்விடத்திலிருந்து வேறு இடத்திற்குக் கொண்டு போகாமலும், அருவருப்புப் படாமலும் இருந்து வருவார்கள். அந்தப் பதினைந்து நாட்களில் முதல் மூன்று இரவுகளில் ஓம குண்ட நெருப்பைச் சுற்றிலும் ஈசனை நினைத்துக் கொண்டு நடனம் ஆடி மேள வாத்தியம், கொம்பு, தாரை, தப்பட்டை, நகரா முழங்க மிகச் சிறப்பாகப் பக்தியோடு கொண்டாடுவார்கள்.

இந்த ஓம குண்டத் திருவிழா நடக்கும் இரவுகளில் மற்ற வகுப்பார்கள் யாராகிலும் அந்த இடத்தில் சென்று வேடிக்கை பார்த்தாலும், கோவ் மக்களுக்குத் தெரியாமல் ஒளிந்து பார்த்தாலும், கோவ் மக்களில் யாருக்காவது அருள் (மிறல்) வர, கோ-பா-கேர்க்காரன் (மிறலாடி) கண்களில் அது தெரியுமாம். உடனே மிறலாடி தன் கையால் நெருப்பை அடுத்து, ஒளிந்து பார்க்கிறவர்களின் மேல் வாரிப் போடுவாராம். அப்படி எறியப்பட்டவர்கள் மூன்று நாட்களுக்குள்ளாகவோ அல்லது மூன்று மாதங்களுக்குள்ளாகவோ இறந்து விடுகிறார்களாம். இந்த அபூர்வ சக்தியை இன்றும் கண்கூடாகக் காணும், மற்ற இன மக்கள் கூறும் போது கேட்டால் மிகவும் அச்சம் தோன்றும்படி இருக்கிறது.

## “கோவ்” என்ற பெயர் வந்த காரணம்

ஆய்னோர் ஆசீர்வதித்து “அனைத்துப் பொருள்களையும் படைத்திருக்கிறேன். கோமாதா உனக்கு அளிக்கப்பட்டதால், உன் குலம் ‘கோ-குலம்’ என்றும், உன் பெயர் ‘கமட்டன்’ என்றும், உன் மனைவி பெயர் ‘மாதி’ என்றும் ஆகுக. அனைத்தும் உன்னுடையன!” என்று வரமளித்தார். அன்று முதல் அந்த ஆய்னோர் நேரே வருவதும் போவதுமாக இருந்தார்.

இவற்றை கோவ் மக்கள் பஞ்சாயத்தில் கூறும்போது கிறிஸ்தவனாகிய என் சிந்தனை ஓடியது. ஏனென்றால் இந்த நிகழ்ச்சி கிறிஸ்தவ மரபுப்படி ஆதாம், ஏவாள் ஆதியில் உண்டானதை நினைவுபடுத்தியுள்ளதன்றோ?

செய்தியைத் தொடர்வோம். பிறகு கம்பட்டனும், மாதியும் தாங்கள் குடியிருக்கச் சிறு குடிசையை ஏற்படுத்திக் கொண்டார்கள். பிறகு ஆய்னோரை நினைத்து வேட்டையாடி மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனர். பிறகு இவர்களுக்கு இரண்டு ஆண் குழந்தைகளும், இரண்டு பெண் குழந்தைகளும் பிறந்தனர். இரண்டு ஆண் குழந்தைகளுக்கும் 'கமட்டன்' என்றும், பெண் ஒருத்திக்கு 'மாதி' என்றும், மற்றொருத்திக்கு 'நீலி' என்றும் பெயரிட்டு வளர்த்தனர்.

இக்குழந்தையின் பெற்றோர்கள் ஞானக்கண் களினாலேயே எதையும் அறிந்து கொள்ளும் ஆற்றலைப் பெற்றவர்கள். மாதி, நீலி, கமட்டன் இருவர் ஆக நால்வரும் தம் பெற்றோர்கள் இறந்துவிட்டதும், அவர்களை நெருப்பைக் கொண்டு எரித்தார்கள். இந்தப் பழக்கமே இன்றும் இருந்து வருகிறது. ஒரு தாயின் வயிற்றில் பிறந்த அண்ணனும், தம்பியும் தங்கள் உடன்பிறப்பையே மனைவிகளாக்கிக் கொண்டு மகிழ்ச்சியாக வாழ்ந்து வந்தார்கள்.

உடன்பிறந்தவர்களை மனைவியாக்கிக்கொள்ளும் பழக்கம் இந்த ஆதிவாசிகளிடம் மட்டும் இல்லை. வேறு பல ஆதிவாசிகளிடமும் உண்டு. மேலும், இன்று கற்ற ஒரு இன மக்கள் நகரங்களில் வாழ்ந்தாலும், அவர்கள் இன்றும் சில நேரங்களில் தங்கள் சொந்தத் தங்கையைத் திருமணம் செய்கின்றனர். இதே கதையை மத்தியப் பிரதேசத்தில் அம்பும் வில்லுமேதான் தெய்வமென்று வணங்கும் பில்லர்களும் கூறுகிறார்கள்.

எந்த நேரத்திலும் ஆய்னோரை நினைத்துத் தங்களுக்கு வேண்டியதைப் பெற்று வந்தார்கள். ஒரு நாள் காட்டில் வேட்டையாடியபோது ஒன்றும் கிடைக்கவில்லை.

கோவையா இருவரும் சலிப்படைந்து இருந்த பொழுது தங்களுக்குப் பாலமுது கொடுக்க வேண்டும் என்று கருதி கானகத்தில் நின்று கொண்டிருந்த காமதேனுவைத் தங்களுடைய பசி மிகுதியால் ஏதோ விலங்கென நினைத்து அம்பு தொடுத்தார்கள். காமதேனு மூர்ச்சையடைந்து விழுந்து விட்டது. இதைக் கண்ட ஆய்னோர் சினமுற்று, “மூர்க்கர்களே!” என்று உதைத்தார். உடனே கோவ் மக்களின் கிரீடமும் பட்டாடையும் மறைந்தன. உடனே அண்ணன், இறைவனின் காலைப் பிடித்துக் கொண்டு, “மன்னிக்கவும்!” என்று வேண்டினான். அப்பொழுது தம்பியோ இறைவனுக்கு அஞ்சிக் காட்டில் ஓடி மறைந்தான். உடனே ஆய்னோர் தம்பியினுடைய தலைமயிரைக் கொய்து விட்டார். தலைமயிரை இழந்த தம்பி (தோதுவன்) கொண்டை போடுவதில்லை. இப்பழக்கம் தோதுவரிடம் இன்றுமுளது. அண்ணனோ (கோவோ) இறைவனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டதால் அவர், “மகனே! கோமாதாவைக் கொல்ல முயன்றதால், உன் பாவம் தீர அதன் குருதியைக் குடிப்பாய்” என்றார்.

அவ்வாறே (அண்ணன்) கோவானவன் பாவம் தீரக் குடித்தான். (இன்று குருவிக்காரர்களும், கடாவின் குருதியைக் காளி பூசையின் போது குடிக்கின்றனர்) குடித்ததும் கோமாதா மூர்ச்சை தெளிந்து எழுந்து மறைந்துவிட்டதாம். கடைசியில் ஆய்னோர் கோவையாவைப் பார்த்து, “நன்மை-தீமை, இறப்பு-பிறப்பு அனைத்தையும் அடைவாய்; கடைசிக் காலத்தில் உன் பாவங்கள் மன்னிக்கப்படும். இன்று என்னை உன் தம்பி ‘தோது’ செய்து விட்டு ஓடியதால், அவன் தோதுவனாகவே இருந்து வாழ்வான்” என்றார். அப்படியே அந்நாள் தொட்டு கோ-குலம் தோதுவர் குலமாக மாறியது. “தோது” என்பதற்குக் கோவ் மொழியில் ஏமாற்றுதல் என்பது பொருளாம். ‘வன்’ என்றால் ஒருவன் என்பது பொருள். இது தமிழ் மொழியை ஒத்தே இருக்கிறது.

ஏழு ஊர்ப் பஞ்சாயத்தில் வயதானவர்கள் கூறிய செய்திகளை எல்லாம் எழுதிவிட்டேன். சுமார் எண்பது வயதுக்கு மேலான ஒருவர் மட்டும் இன்னும் மௌனமாக இருந்தார். அவர் இமயத்தில் இருக்கும் சந்நியாசி என்றே கூறவேண்டும். அவர் கல்கத்தா, பம்பாய், காசி, பத்ரிநாத், கயா முதலிய பல இடங்களுக்குச் சென்று வந்தவராம். அவர் கோகால் கோவையாவைச் சேர்ந்தவர். அவர் என்னைச் சந்தித்து, தமக்குத் தம் பாட்டனார் கூறிய சுவையான பின்வரும் செய்தியைக் கூறினார்.

"எங்கள் முன்னோர்கள் மலையிலும், குகைகளிலும் வாழ்ந்தார்கள். பழம், கிழங்குகளைப் புசித்தார்கள். அவர்களுக்கு ஒரு மகன் பிறந்தான். அவன் எல்லாவற்றையும் செய்யும் ஆற்றலுள்ளவன். எல்லா ஆயுதங்களையும் செய்தான். சமையலுக்கு வேண்டிய சாமான்களையும் செய்தான். இளமைப் பருவம் அடைந்ததும் ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டான். இந்தத் தம்பதிகள் மிகவும் 'கோ-பா' பக்தி உடையவர்கள். ஞானக் கண்ணால் எல்லாவற்றையும் தெரிந்து கொள்ளும் ஆற்றல் உடையவர்கள். அச்சக்தி இன்று எனக்கும் உண்டு. ஏனென்றால் என் ஞானக்கண்ணால், "நீங்கள் உண்மையான வரலாறு கிடைக்க வேண்டும் என்று எப்போதும் ஆண்டவனை நினைப்பது தெரிகிறது.

"அவர்களுக்கு மூன்று ஆண் பிள்ளைகள் பிறந்தார்கள். அந்த மூன்று பிள்ளைகளுக்கும், அவர்கள் தகப்பனார் தமக்குத் தெரிந்த எல்லாத் தொழில்களையும் கற்றுக் கொடுத்தார். அந்தப் பிள்ளைகளுக்குக் காட்டில் எருமைகளை மேய்ப்பதுதான் வேலை. அப்பொழுது தகப்பனால் கொடுக்கப்பட்ட அம்பையும், வில்லையும் கொண்டு போவார்கள். அந்த மூவரும் ஒரு நாள் தங்கள் அம்பால் ஒரு பசுவின் கன்றைக் கொன்று விட்டார்கள். அக்கன்றின் மேல் அந்தப் பிள்ளைகளின் பெற்றோர் களுக்கு ஆசை அதிகம் என்பது அவர்களுக்குத் தெரியும். அதைத் தன் ஞான சக்தியால் தெரிந்து கொண்டார், அவர்கள் தகப்பனார்.

"உடனே கொஞ்சம் பசுக்கன்றின் இறைச்சியும், எருமைக் கன்றின் இறைச்சியும் தனித்தனியாக ஒவ்வொரு சட்டியில் போட்டு தானியங்களுடன் சேர்த்து வேக வைத்தார். பிறகு தம்முடைய மூன்று பிள்ளைகளையும் அழைத்து, "நீங்கள் ஒவ்வொரு சட்டியிலுள்ளதை - நீங்களே தேர்ந்து எடுத்துச் சாப்பிடுங்கள்" என்று கட்டளை இட்டார். மூவரும் சாப்பிட்டார்கள். பிறகு மூவரையும் பார்த்து, "பசுவின் மாமிசத்தைச் சாப்பிட்ட நீ 'கோவையா' என்றும், எருமைக் கன்றின் இறைச்சியை உண்ட நீ 'தோதுவன்' என்றும்; எருமையின் இறைச்சியை உண்ட நீ 'குறும்பன்' என்றும் பிரிந்து வாழக்கடவீர்கள். பாவம் செய்ததால் நீங்கள் பிரிக்கப்பட்டாலும், ஒருவருக்கொருவர் உதவி செய்து கொண்டு வாழ வேண்டும்" என்று கூறி மறைந்தார்.

"மறைந்த தங்கள் பெற்றோர்களைத் தேடிக் கொண்டே மூன்று திசைகளில் சென்ற சகோதரர்கள் தனித்தனியாக வீட்டைக் கட்டிக்கொண்டார்கள். இவர்கள் வீட்டைக்கட்டின இடங்களுக்குக் 'கோவ்- 'கோகால்!' - என்றும்; தோதுவன் - 'மண்டு' அல்லது 'மந்து' என்றும்; குறும்பன் 'மோட்டும்' என்றும் பெயர் வைத்துக் கொண்டார்கள். இன்றும் அதே பெயர்தான். இந்த மூவரும் ஒற்றுமையுடன் பழகி வந்தார்கள். பெண்களுடன் இந்த மூவரும் இன்பத்திலும் கலந்து வாழ்ந்து வந்தார்கள். சில நாட்களுக்குப் பிறகு, "நமக்குள் பெண்கள் விஷயத்தில் கட்டாயம் சண்டை உண்டாகும். ஆகையால், இனிமேல் நாம் ஒரு குரல் கூப்பிடு தொலைவில் இருந்து கொண்டுதான் பேச வேண்டும்!" என்று அந்த மூன்று சகோதரர்களும் தீர்மானித்தார்கள். அன்று முதல் இன்று வரையில் இந்த மூன்று சகோதரர்களும் அப்படியே சுமார் 50 மீட்டர் தொலைவில் நின்று பேசுவதை இன்றும் நீலகிரியில் நான் கண்டேன். இன்றும் தோதுவர்கள் எருமைக்கன்றின் இறைச்சியையும, கோவ் மக்கள் பசுவின் இறைச்சியையும், குறும்பர்கள் எருமையின் இறைச்சியையும் சாப்பிட்டு

வருகிறார்கள். ஆனால், சிலர் இன்று' இறைச்சி சாப்பிடுவதை விட்டு வருகிறார்கள். எங்களுடைய ஈமச்சடங்கில் எருமைகளையும் பசுவையும் கொலை செய்தால் அன்று மறைந்தவர்கள் வருவார்கள் என்று எங்களிடம் அன்று முதல் இன்று வரையில் நம்பிக்கை இருந்து வருகிறது. இன்றும் ஈமச்சடங்கில், நாங்கள் பசுவையும், தோதுவன் எருமையையும் பலி கொடுப்பதுண்டு" என்று சொல்லி முடித்தார் பெரியவர்.

இப்பெரியார் அன்று கூறிய பண்டை நிகழ்ச்சியை ஆதாரமாக வைத்துக்கொண்டு, பல்லாண்டுகளாகச் சிந்தனையுடன் அலைந்த எனக்கு ஆண்டவன் அருள் கிடைத்தது.

கோகாலில் இருக்கும் கோவ் மக்கள் பண்டைக் காலத்தில் கோத்தர் மைதானத்தில் இருந்தார்கள். அன்று அங்கு வாழ்ந்த கோவ் மக்களின் மூதாதையர்களால் இரண்டு தூண்கள் சிற்ப வேலைப்பாடுகளுடன் செய்யப்பட்டன. அந்தத் தூண்களில் ஒன்றில் மீன் வடிவமும், மற்றொன்றில் 'நீலி குறும்பன்' என்று செதுக்கிய ஒரு பெண் உருவமும் ஓர் ஆண் உருவமும் இன்றும் இருக்கின்றன. 'நீலி' என்பவள், 'கோவ்' மக்களுக்கு முதலில் பிறந்த இரண்டு பெண்களில் ஒருத்தி, மற்றொருத்தி 'மாதி' என்பவள். இதனை எல்லா கோவ் மக்களும் ஒப்புக்கொள்கின்றனர். பெரியவர் சொன்ன கதையின்படி ஆராய்ச்சி செய்யும் பொழுது 'நீலி'க்குப் பக்கத்தில் 'குறும்பன்' என்று இருப்பதால், இந்த மூவரும் ஒரே தாயின் மக்கள் என்பது திண்ணம். மேலும் பண்டைக்காலத்தில் குறும்பர்களே, இப்படி அயல் அரசனுக்குப் பயந்து, மலைகளிலும், காடுகளிலும் ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வந்திருக்க வேண்டும் என்றும் புலனாகின்றது. ஏனென்றால் இன்று குறும்பர்கள் கடல் தாண்டியும் வாழ்கிறார்கள் என்பதற்குப் பல ஆதாரங்கள் கிடைத்திருக்கின்றன அல்லவா! அப்படி இவர்கள்

குறும்பர்களாக இருந்தால், கோவ் மக்கள் தங்களைத் 'தமிழ் மக்கள்' என்று ஒப்புக்கொள்வதைப் போல், தோதுவர்களும் பண்டைக் காலத்துத் தமிழ் மக்களே என்பதும் திண்ணம். தமிழ் நூல்களை வைத்துக் கொண்டு சரியானபடி ஆராய்ச்சி செய்யாத, மேல் நாட்டினர் கூறுவது போல், நாமும் தோதுவர்கள், வெளிநாடுகளிலிருந்து வந்தவர்கள் என்ற கூறினால் நாம் சரியானபடி ஆராய்ச்சி செய்யாதவர்கள் என்பதே முடிவாகும் அன்றோ? மேலும், இவர்களின் கற்றூணில் மீன் இருப்பதால் பாண்டியனுக்கும் இவர்களுக்கும் கட்டாயம் பண்டைக் காலத்தில் தொடர்பு இருந்திருக்க வேண்டும் என்று திட்டவட்டமாகக் கூறலாம். நிற்க,

கோவ் மக்கள் தங்களின் முடியின் (கிரீடத்தின்) சின்னத்தை இன்றும் தாங்கள் ஆய்னோரின் கோவில்களில் வைத்திருப்பதைக் காணலாம். அன்று பெற்று இழந்த ஆடையின் சின்னமாக இன்றும், "கோ - பா - ஆட்குப் பாஸ்ம்" என்ற ஒரு விதப் பாவாடையை அணிந்து கொண்டு ஆய்னோரை நினைத்துத் திருவிழாக் காலங்களில் ஆடுவர். கிரீடத்தை இழந்த கோவ் மக்கள் அன்று முதல் காட்டில் வளரும் ஒருவிதக் காட்டுக் கொடியைக் கொண்டு கொண்டையாகக் கட்டிக்கொள் கிறார்கள். கோவ்-மக்களுள் பதினைந்து வயது நிரம்பிய ஒவ்வோர் ஆணும், பௌர்ணமியன்று அந்தக் கொடியைக் கட்டிக்கொள்ள வேண்டும். ஆனால் சிலர் கொடிக்குப் பதிலாக கயிற்றில்பஞ்சலோகங்களால் செய்யப்பட்ட உருத்திராக்கக் காய்களைக் கோத்துக் கொண்டையில் வைத்து இன்றும் கட்டிக் கொள்கின்றனர். ஆனால் இன்று அவர்கள் பலரிடம் பழகுவதால், சிலர் 'கிராப்' வைத்துக்கொள்கிறார்கள். பெண்களோ நீலகிரியில் மட்டும் வளரக்கூடிய, 'மண்டுவ்' செடியின் இலையைக் கொண்டையில் வைத்துக் கட்டிக்கொள்கிறார்கள்.

தோதுவப் பெண்களோ அன்று முதல் ஆய்னோருக்கு அஞ்சி கொண்டை போவதில்லை. ஆனால் கோவ்

பெண்கள் அணியும் அதே மண்டுவ் செடியின் இலையை, தோதுவப் பெண்கள் இறந்த பின் பிணத்தின் மேல் சூட்டும் பழக்கம் இன்றும் உண்டு.

## பிரிவின் காரணம்

வில்லையும், முடியையும் (கிரீடத்தையும்) கொண்டையையும் இழந்த தம்பி தோதுவன், அன்றே 'கோடநாடு' என்ற இடத்திற்குப் போய்த்தங்கினான். அண்ணனாகிய கோவுக்கும், தம்பி தோதுவனுக்கும் வழி முறையினர் பெருகினர்.

கோ மக்களோ தங்களுக்கு வேண்டியவற்றைத் தாங்களே செய்து கொண்டார்கள். ஒரு நாள் தோதுவன் தன் மனைவியுடன் அண்ணன் வீட்டுக்குச் சென்றான். தன் உடன் பிறந்தவர்கள் துயரப்படுவதைக் காணச் சகியாமல், தம்பிகளுக்கு வேண்டியதை எல்லாம் கோவ் தருவதாக வாக்குக் கொடுத்து உதவி வந்தான்.

இன்று தோதுவர்கள் தங்கள் அண்ணன்மார்களைக் கூப்பிடும் பொழுது, "கோவையா!" என்றே கூப்பிடுகின்றனர். அன்று கோமாதாவின் இரத்தத்தைச் சுவைத்ததால் இன்றும் 'கோ' இறைச்சியைச் சாப்பிடுகிறார்கள். ஆனால், தோதுவரோ கோ இறைச்சியைச் சாப்பிடாமல், எருமைப் பாலைக் குடித்து, அதன் கன்றுகளின் இறைச்சியை இன்றும் புசித்து வருகிறார்கள்.

இங்ஙனம் ஆண்டுகள் பல சென்றன. இவர்களின் வழிமுறையினர் பெருகினர். நீலகிரியில் இட நெருக்கடி ஏற்பட்டது. எருமையின் மேய்ச்சலுக்கு வசதியும் குறைந்தது. ஆகையால் இவர்கள் தங்கள் வழிமுறையினருக்கு நீலகிரியை (1) பரங்கி நாடு (2) தொட்ட நாடு (3) மேற்கு நாடு (4) வய நாடு என்று நான்காகப் பிரித்துக் கொண்டு சிதறுண்டு வாழ்ந்தார்கள்.

அன்று சென்ற கோவ் மக்களே இன்று (1) குந்தை கோகால் (2) கொல்லிமலை கோகால் (3) சோலூர்

கோகால் (4) திருச்சிக்கடி கோகால் (5) அக்கால் கோகால் (6) கீழ்க்கோத்தகிரி கோகால் (7) கூடலூர் கோகால் முதலிய இடங்களில் வாழ்ந்து வருகின்றனர்.

உடன் பிறந்தானாகிய கோவையாவைப் பிரிந்து அன்று கோடநாடு சென்ற தோதுவனோ, வசதி இன்மையால் பல துன்பங்களை அனுபவித்தான். ஆகையால், ஒரு நாள் கீழ்க் கோத்தகிரி கோகாலில் இருக்கும் கோவிடம் சென்று, "கோவையா! எனக்கு காட்டில் ஒன்றும் கிடைக்கவில்லை. நீயோ ஆய்னோரின் ஆற்றலால் அனைத்தையும் அடைந்து மகிழ்ச்சியுடன் இருக்கிறாய். நானும் உன் உடன் பிறந்தவன் அல்லனோ! ஆகையால் நீ எனக்கு உதவி செய்ய வேண்டும்" என்று வேண்டினான்.

உடனே கோவையா, தோதுவனை அழைத்துக் கொண்டு, 'அக்நாடு தேல்' (இன்று அங்கநாடு) என்ற காட்டிற்கு வந்தான். அங்கு எழில் மிக்க ஒரு குளமும், ஒரு வில்வ மரமும் இருப்பதைக் கண்டான். உடனே ஆய்னோரை வணங்கி, அந்த வில்வ மரத்திலிருந்து ஏழு கிளைகளை ஒடித்து, அக்கிளைகளை எருமைக் கொம்புகளைப் போல் வளைத்து, அக்கொம்புகளை அந்த எழில் மிக்க குளத்தில் போட்டான். பிறகு ஆய்னோரை நினைத்து அழைத்தான். ஆய்னோர் தோன்றினார்.

"இறைவேனே! இந்த ஏழு கொம்புகளும் ஏழு எருமைகளாக மாற வேண்டும். அவை எங்களுக்கு அடங்கிப் பெருகி எங்களுக்கு உதவியாக இருக்க வேண்டும்" என்று கோவையா வேண்டினான்.

உடனே குளத்தினின்று ஐந்து பெண் எருமைகளும், இரண்டு எமைக் கடாக்களும் குளித்து விட்டுக்கரைக்கு வருவதைப் போல நடந்து வந்தன. "மகனே! இவ்வெருமைகள் இங்கிருந்து எவ்விதப் புல்லையும் தின்னாமலும், எந்தத் தண்ணீரையும் தாண்டாமலும், குடிக்காமலும், எங்கும் படுக்காமலும் நடந்து சென்று

எங்கே அவை படுத்துக் கொள்ளுகின்றனவோ, அங்கேதான் அவை உனக்குக் கட்டுப்பட்டு நிரந்தரமாக இருக்கும்!" என்று கூறி ஆய்னோர் மறைந்தார். இவைகளைக் கண்ட தோதுவன் கோவிடம் நன்றியுடன் விடைபெற்று, எருமைகளை ஓட்டிக்கொண்டு சென்றான். வில்வ மரத்தை வளைத்து எருமைகள் அன்று உண்டானதால், இன்றும் தோதுவர்களின் ஒவ்வொரு மந்திலும் (குடிசை) தங்களுடைய இறந்து விட்ட எருமைகளின் நினைவுச் சின்னமான எருமைக் கொம்பு போல் வளைத்த கம்பிகள் ஐம்பது, அறுபது செருகி இருப்பதைக் காணலாம். நடந்து சென்ற எருமைகள் மாலை நேரமாகி விடவே இன்று ஓற்கல் மந்து என்று வழங்கிவரும் இடத்தில் படுத்துக்கொண்டன. அன்று அந்தத் தெய்விக எருமைகள் நடந்து சென்ற வழிகளை இன்றும் காணலாம். அப்பொழுது அந்த இடம் அடர்ந்த காடுகளாகவும், குளிர் மிகுந்தும் இருந்தது. அந்த இடத்தில் தோதுவன் முதல் மந்தைக் கட்டிக் கொண்டான்.

தோதுவனின் தாயகம் கோட நாடு. இன்றும் அங்குப் பல மந்துகள் இருக்கின்றன. அதற்காகத் தான் இந்தப் புதிய இடத்திற்கு, 'ஓற்கல் மந்து' என்று பெயர் உண்டானது. 'ஓற்' என்பது கோவ் மொழியிலும், தோதுவனுடைய மொழியிலும், 'ஒன்று' என்று பொருள்படும். ஆகையால் ஒரு மந்து (ஒரு குடிசை) முதலில் ஏற்பட்டதால் இப்பெயர் வரலாற்றுச் சான்றாக வழங்கப்பட்டது. அந்தத் தெய்விக எருமைகளை மிகவும் மரியாதையுடனும் கவனத்துடனும் வளர்த்து வாழ்ந்து வந்தார்கள். இக்காரணத்தால் இன்றும் தோதுவர்கள் தங்களுடைய எருமைகளைத் தெய்வத்திற்குச் சமமாக மதித்து வருகிறார்கள்.

ஆண்டுகள் சென்றன; இன மரபினர் பரவிப் பெருகினர். ஒருநாள் சோலூரில் வாழ்ந்த கோவ் மக்கள் வேட்டையாடும்பொழுது ஓற்கல் மந்து இடத்தில் தோதுவர்களைக் கண்டதும், "நீங்கள் எப்படி இங்கு

வந்தீர்கள்? உங்கள் ஊர் கோட நாடு அன்றோ?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் கீழ்க் கோத்தகிரி கோவையா செய்த உதவிகளை எல்லாம் கூறி, "இனி எங்களுக்கு இங்கு இட வசதி இல்லை" என்று கூறினார்கள். அதற்கு சோலூர் கோல், தங்களுடன் சில தோதுவர்களை அழைத்துச் சென்று, "முத்தநாடு, தார் நாடு என்ற இரண்டு இடங்களிலும் வாழலாம். உங்களுக்கு வேண்டிய பொருள்களை எங்கள் சோலூருக்கு வந்து பெற்றுக்கொள்ளுங்கள்" என்று கூறினார்கள். அதே இடத்தில்தான் இன்று வரையிலும் தோதுவர்கள் வாழ்ந்து வருகிறார்கள். அன்று முதல் இன்றுவரையில் கோவையாவிடம் பல உதவிகளைப் பெற்றுக்கொள்கிறார்கள். கோவ் மக்கள் பண்டைக் காலத்தில், ஒருவித நாரால் தாங்கள் போர்த்திக் கொள்ளும் கோ-பா தொய்ர்வ்வை (புத்துக்குளி) நெய்து கொள்கிறார்கள். தோதுவர்களுக்கும் கொடுத்து வந்தார்கள். இந்தச் செடியை இன்றும் காணலாம். ஆனால் இன்று சில செட்டியார்களிடம் நூல் துப்பட்டியை வாங்கிக்கொள்கிறார்கள்.

## கோவுக்கும் தோதுவுக்கும் உண்டான பஞ்சாயத்து

கோவ் மக்களோ ஆங்காங்கே பல ஊர்களை ஏற்படுத்திக்கொண்டு, தங்கள் குல தெய்வமாகிய கோ-பா ஆய்னோருக்கும் அம்னோருக்கும் (கம்பட்டீசுவரனுக்கும், காளிக்கும்) தனித்தனிக் கோவில் கட்டினார்கள். அத்தெய்வங்களுக்குப் பால் பூசை செய்தார்கள். ஆண்டுக்கொரு முறை நைவேத்தியமும் தூமமும் கொடுத்தார்கள். அப்பொழுது வில்லுக்கும் அம்புக்கும் சக்தி பூசையும் செய்தார்கள். அங்ஙனமிருக்கும்போது மக்கள் பெருகினர். அப்பொழுது ஏழு ஊர் கோவ் மக்களும் ஒன்றாகக் கூடிப் பஞ்சாயத்தில் தனித்தனியாக அந்தந்த ஊர்களில் கோ-பா கூடல் மாதத்தில் (ஜனவரி மாதம்) பாவாடை நட்டன்மாடி ஓமகுண்ட நெருப்பை ஏற்படுத்திக்

கொண்டனர். இவைகளைக் கண்ட தார் நாடு, முத்த நாட்டுத் தோதுவர்களின் தலைவர் சோலூர்க் கோவிடம் சென்று ஏழு ஊர் பஞ்சாயத்துக் கூட்டும்படி கேட்டார். அப்படியே தொட்ட நாடு என்ற திருச்சிக்கடியில் பஞ்சாயத்து நடைபெற்றது.

அப்பொழுது தோதுவத் தலைவன், "கோவையா! நீங்கள் கோ-பா ஆய்னோருக்குக் கூடல் மாதத்தில் ஓமகுண்டமும், பால் பூசையும் செய்கிறீர்கள். ஆகையால் அந்தத் திருவிழாவுக்கு நாங்கள் தூய்மையான நெய்யையாவது காணிக்கையாகக் கொண்டுவர அனுமதியுங்கள்" என்று வேண்டினான்.

அதற்கு கோவ் மக்கள் ஒப்புக்கொண்டார்கள். கோவ் மக்கள் தோதுவர்களில் இவ்வளவு இவ்வளவு பேருக்கு வேண்டிய உதவிகளைச் செய்து ஆதரிக்க வேண்டும் என்று பஞ்சாயத்தில் தீர்மானித்து அன்றே தங்கள் தங்கள் ஊர்களுக்கு உடன் பிறந்தவர்களாகிய தோதுவர்களை அழைத்துச் சென்றனர். அன்று நடந்த அந்தப் பஞ்சாயத்தின்படி, குந்தை கோவ் மக்கள், தங்களுடன் வந்த தோதுவர்களுக்குப் பேர்மந்து கிலிஞ்சு மந்தும், கொல்லிமலை கோவ் மக்கள் நெச்சு மந்தும், கூடலூர் கோவ் மக்கள் கிரி வேலி மந்தும் சுண்டுவேலி மந்தும், திருச்சிக்கடி கோவ் மக்கள் விக்கி வேத்து மந்தும், சோலூர் கோவ் மக்கள் தார் நாடு மந்தும், முத்த நாடு மந்தும்,பொரங்காடு கோவ் மக்கள் (அக்கால கோவ் மக்கள் இன்று) வெட்டு மந்தும், கீழ்க் கோத்தகிரி கோவ் மக்கள் கோடநாடும் தனித்தனியாகப் பிரித்து குடியிருக்கச் செய்தனர். அன்று முதல், கோவையர் ஊர்களுக்கு அந்த ஊர்களில் அந்தந்த ஊர்களில் வாழும் தோதுவர் கூடல் கோ-பா-ஆய்னோர் திருவிழாவுக்கு நெய் கொடுத்து வருகிறார்கள். தங்கள் ஊரில் வாழும் தோதுவர்களுக்கு, கோவ் மக்களும் தங்களால் இயன்ற கத்தி, கோடரி., மண் பாண்டங்களையும் அன்று முதல் இன்றுவரை கொடுத்து உதவி செய்து வருகிறார்கள். சில ஆண்டுகளுக்குப் பின் தோதுவர்கள், 'இனிமேல் பால்

பூசை மட்டும் செய்ய வேண்டும்' என்று தீர்மானித்து கோவ் மக்கள் வணங்கும் கம்பட்டீசுவரனையே (கோ-பா-ஆய்னோர்) "கனாட்டுராயன்" என்று பெயர் வைத்துக் கொண்டு ஆண்டுக்கொரு முறை புனிதமான எருமைகளின் பாலைக் கொண்டு பால் பூசை செய்கிறார்கள். கோவ் மக்களும், தோதுவர்களும் உருவ வழிபாடில்லாமல் ஆண்டவனை வழிபட்டு வருகிறார்கள். தோதுவர்கள் பாலைச் சேர்த்து வைக்கும் இடங்களே அவர்கள் கோவில்கள். தெய்வத்திற்குச் சேர்த்த பாலை தோதுவர்கள் கடைசியில் குடிப்பார்கள்.

இட வசதி இல்லாமல் அன்று 'ஓற்கல் மந்திலிருந்து' முத்த நாடு, தார் நாடுகளுக்குத் தோதுவர்கள் குடிபோனபோது தங்களுடன் சில எருமைகளையும் ஓட்டிக் கொண்டு போனார்கள். அப்படிப் போகும் பொழுது, சில எருமைகள் காட்டுக்கு ஓடி விட்டன. காட்டுக்கு ஓடின எருமைகளைத் "தெய்விகச் சக்தி வாய்ந்தவை" என்று கருதி, அவைகளை மறுபடியும் பிடித்துக்கொண்டு வந்து, பூசை செய்து வருகின்றனர். இந்த எருமைகள் அடர்ந்த சோலைகளில் இருக்கின்றன. அவைகளைத் "தீஈர்" என்றும், சாதாரண எருமைகளைத் "திர்ஈர்" என்றும் அழைக்கின்றனர்.

தோதுவர்கள் ஆண்டுக்கு ஒரு முறை தங்கள் கோவிலைத் திறந்து சுத்தம் செய்த பின் புனிதமான எருமைகளில் முதன் முதலாக ஈனப்பட்ட கடாக் கன்றை அறுத்து அதன் குருதியை எடுத்துத் தண்ணீர் தெளிப்பது போல் தங்கள் கோவிலுக்குள் தெளிப்பார்கள். பிறகு அந்த எருமைக் கன்றின் இறைச்சியை வேக வைத்து பாலுடன் சேர்த்து பொங்கலாகச் செய்து சாப்பிடுவார்கள். தவிர இவர்களின் ஈமச் சடங்குகளில் சாதாரண எருமைகளைத்தான் வெட்டுவார்கள். ஆனால் இன்று அவர்கள் பலியிடுவதை நிறுத்தி விட்டனர்.

## வில்லின் மகிமை

இப்படித் தோதுவர்களும் கோவ் மக்களும் இன்பமாக வாழும் நாளில், நெச்சமந்து தோதுவர்களில் மூவர் உதகை-கொல்லி 'மலைக்கு அடுத்த 'தாம்பட்டி' மந்திற்குச் செல்லும்போது, கொல்லிமலையைச் சேர்ந்த ஒரு நொண்டிக் கோவையா அவர்கள் போவதைப் பார்த்துக் கேலி செய்தான். அதனால் சினமடைந்த தோதுவர்கள் அவனைக் கொலை செய்து புதைத்து விட்டார்கள். இதைப் பார்த்துக்கொண்டிருந்த நொண்டியின் நாய், நொண்டிக் கோவையாவின் அண்ணனிடம் சைகை காட்டியது. உடனே, ஐயங்கொண்ட உடன் பிறந்தவர்கள் நாயுடன் சென்று நடந்ததை எல்லாம் தெரிந்து கொண்டார்கள். உடனே கோவ் பிறப்பாளர்கள் தங்கள் வில்லையும், அம்பையும் எடுத்துக்கொண்டு தோதுவர்களைத் தொடர்ந்து சென்றார்கள். ஆனால், திகிலடைந்த அந்தத் தோதுவர்களோ தங்கள் மந்தாகிய நெச்சுமந்துக்குப் போகாமல், கோட நாட்டு மந்துக்குப் போய்க் கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவர்களைத் தொடர்ந்து வந்த கோவையர்கள் தோதுவர்களை 'உச்சிக்கடுவு' மைதானத்தில் பார்த்து விட்டனர். இன்று 'கட்டபெட்டு' என்ற இடத்தில் நின்று, கோபா ஆய்னோவை நினைத்து அம்பில் நாண் தொடுத்து, "கோபா கொட்மரமே கொட்பற்" என்று அம்பை விட்டார்கள் அதாவது 'முள் மரங்களைக் கொண்டு அவர்களின் தலைமயிரைப் பிடி' என்பதாம். அம்பால் இரண்டு தோதுவர்கள் மாண்டார்கள்! மற்றொருவன் கோட நாட்டுக்கு ஓடிவிட்டான்!

இரண்டு தோதுவர்கள் இறந்த இந்த இடத்தில், இன்றும் ஒரே பாறை இரண்டாகப் பிளவுபட்டிருப் பதைக் காணலாம். மேலும் அன்று அம்பு தொடுத்த இடத்திற்கு அன்று முதல் இன்று வரையில், "அம்பு கல் பாடம்' என்பதிலிருந்து மருவி "அம்பு கல் ஆடா" என்று பெயர் வழங்கி வருகிறது.

இந்த அம்பு கல் ஆடாவைப் புகைப்படம் பிடிக்க வேண்டுமென்று நானும் அக்கால்-கோத்தகிரி கோவ் மக்களில் ஐந்து பேரும் சென்றோம். அந்தப் பயணத்தில் நாங்கள் பட்ட துயரங்களையும், துன்பங்களையும், இடறி விழுந்ததையும், முட்களால் எங்கள் துணிகள் கிழிந்த செய்திகளையும் ஏட்டில் எடுத்து எழுத இயலாது.

கோட நாட்டு மந்துக்குத் தப்பிச் சென்ற தோதுவன் மூலம் நிகழ்ந்தவற்றைக் கேட்டபின், தோதுவர்களும் கோவ் மக்களும் பெரிய பஞ்சாயத்து ஒன்றைக் கொல்லிமலையில் கூட்டினார்கள். அன்று கூடிய பஞ்சாயத்தில் குந்தை கோவ் மக்களுடன் சில குறும்பர்களும் பஞ்சாயத்தில் கலந்து கொண்டார்கள். குறும்பர்களைக் கண்ட மற்றவர்களும் அவர்களைத் தீர விசாரித்து, "நீங்களும் எங்கள் உடன் பிறப்புத்தான்" என்று கூறி பஞ்சாயத்தில் சேர்த்துக் கொண்டு ஒரே மொழியில் பஞ்சாயத்தைப் பேசினார்கள். மூவர் பேசுவதும் ஏறக்குறைய ஒரே மொழியாக இருந்திருக்க வேண்டும் இல்லையா?

பஞ்சாயத்தில், "கோவ் மக்கள் செய்தது குற்றம். ஓர் உயிருக்காக இரண்டு உயிரைக் கொன்றது பெருங்குற்றம். ஆகையால் மற்றோர் உயிருக்குப் பதில், யாராவது ஒருவர் இந்தத் தோதுவர்களுடன் போய் வசிக்க வேண்டும்" என்று கோவ் மக்களே தீர்ப்புச் சொன்னார்கள்.

"நாங்கள் கோவ் சகோதரன் ஒருவனைப் பிடித்துக் கொண்டு போய் என்ன செய்வோம்? எங்கள் பக்கத்து ஊரின் கீழ்-கோத்தகிரி கோவ் மக்களிடமே இந்தக் கோவையா இருக்க வேண்டும்" என்று தோதுவர்கள் கூறினார்கள்.

தீர்மானத்தின்படி கொல்லிமலை கோவையா ஒருவனைக் கீழ்க் கோத்தகிரி கோவையரிடம் ஒப்படைத் தார்கள். அங்ஙனம் அன்று அனுப்பப்பட்ட கோவ்

நடுக்கேறியைச் சேர்ந்தவன். அன்று முதல் இன்று வரையில் அவன் வழிமுறையினர் கீழ்க் கோத்தகிரியில் வாழ்ந்து வருகிறார்கள் என்று கூறியதும், மறுநாளே நான் கீழ்க் கோத்தகிரிக்குச் சென்றேன். செய்திகளைச் சொன்னதும் என் எதிரிலேயே, "நடுக்கேறி கோவையா!" என்றே சிலரைக் கூப்பிட்டுக் காட்டினார்கள். அவர்களிடமிருந்து மூன்றடி உயரமுள்ள ஒரு மயானக் கூடையை வாங்கி வந்தேன். இன்றும் அஃது என் இல்லத்தில் இருக்கிறது. இந்தத் தீர்ப்பு ஏற்பட்டு சுமார் எண்ணூறு ஆண்டுகள் ஆகிவிட்டனவாம்.

அன்று முதல் கோவ் மக்கள் 'சக்தி அம்பையும் வில்லையும் எடுக்கமாட்டோம்' என்று சத்தியம் செய்து கொடுத்து விட்டார்கள். அன்று முதல் இன்று வரையில் சக்தி வாய்ந்த அம்பும் வில்லும் கோவிலில் இருக்கின்றன. ஆண்டு தோறும் அவற்றை எடுத்துத் தூபம் போட்டு வைத்து விடுகின்றனர்.

## நாடு பிரித்தல்

இந்தப் பஞ்சாயத்தில் கோவ் மக்களும், தோதுவரும், குறும்பர்களும், "நம்மைத் தவிர மற்றவர்கள் இந்த நீலகிரியில் இல்லை. ஆகையால் நமக்குள் இந்த நீலகிரியைப் பிரித்துக்கொள்ள வேண்டும்", என்று தீர்மானித்தார்கள். அதன்படி (1) உயிலட்டியிலிருந்து கட்டபெட்டு வழியாக, "எல்லைக் கட்டி' என்றும் (2) கரி மரம் வழியாகச் சுங்கத்திலிருந்து, 'கௌஹட்டி, நஞ்ச நாடு, எல்லைக் கண்டி' என்றும், (3) அக்டர்லோணி பத்தாபூர், சீகூர் தெப்பக்கடவு, சிரன்காட் வரையில் "சீபோர்ட்டு" என்றும் (4) கட்டபெட்டு, உல்லிக்கல், பர்லி, குஞ்ச பண்ணை, கர்க்கியூர் வரை "அல்லி மாயாறு" என்றும் (அல்லி ராணி ஆண்ட இடம். இன்றும் சில சின்னங்களைக் காணலாம்) இப்படி நான்கு பாகங்களாகப் பிரித்து, இந்த நான்கு பாகங்களையும் (1) மேற்கு நாடு (2) தொட்ட நாடு (3) வைய நாடு (4) பரங்கி நாடு என்று பெயரிட்டுக் கொண்டு வாழ்ந்து வந்தார்கள்.

"நாடு" என்ற சொல்லையும் - இவர்கள் எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் பிரிந்த விதங்களையும் கண்டு - அந்த இடங்களுக்கெல்லாம் பயணம் செய்தேன். அப்பொழுது நான் அடைந்த துயரங்களும் துன்பங்களும் ஏட்டில் அடங்கா. மேலும் நாட்டுப்பிரிவு கோவையாகவும், பரப்பளவில் சரியாகவும் இருப்பதை இன்று கண்ட நான், "பண்டைக் காலத்தில் அயல் அரசர்களுக்குப் பயந்து, பல பகுதிகளிலிருந்து மலைகளுக்கும் காடுகளுக்கும் சென்ற அரச பரம்பரையினரே இவர்கள் என்பதற்குச் சான்றாக உள்ள காட்டில் இருக்கும் பல கல்வெட்டுகளைப் புகைப்படங்கள் பிடித்திருக்கிறேன். அன்று இவர்கள் நாட்டைப் பிரித்த விதம் தொண்டைமான் அரசன் நாடுகளைப் பிரித்துக் கொண்டதைப் போல இருக்கின்றது.

பண்டைக் காலத்தில் பாண்டிய அரசனுக்கும் இவர்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்திருக்க வேண்டும். ஏனென்றால், கோவ் மக்களின் மைதானத்தில் இருந்த ஒரு கல் தூணில் மீன் வடிவம் இருப்பதைக் காண்கிறோம். மேலும், இவர்களுடைய கல்வெட்டு களில் மூவேந்தர் காலத்திலேயே இவர்கள் நீலகிரியைத் தன்னுரிமையோடு ஆண்டார்கள் என்று கூறப் பட்டுள்ளது. மேலும், சேரன் செங்குட்டுவன் கொங்கையை இழந்த கண்ணகிதேவிக்கு சிலை அமைக்கக் கல்லெடுத்து வர நால்வகைப் படைகளுடன் இமயம் செல்லுங்கால் நீலகிரியில் தங்கினான். அங்கே, இமயத்தினின்றும் போந்த முனிவர் வாழ்த்தைப் பெற்று, கொங்கணரின் கூத்துக்களைக் கண்டுகளித்தான். பிறகு அங்கிருந்து இமயம் சென்றது சிலப்பதிகாரம் - கால் கோட் காதையில் கூறப்பட்டுள்ளது காண்க. மேலும், இன்று தோதுவர்களுக்கு இருக்கும் எண்பத்து நான்கு மந்து (கிராமம்)களில் ஒன்று "கண்ணகி மந்து." எனவே சேரன் செங்குட்டுவன் நீலகிரியில் தங்கும் போது அங்கே கொங்கணர் (கொங்கு நாட்டு மக்கள்) வாழ்ந்திருக் கிறார்கள் என்றும் தெரிகிறது. மேலும், இன்று

நீலகிரியில் வாழும் கோவ் மக்களும், தோதுவர்களும், குறும்பர்களும் அன்று தனித்தனியாக வாழ்ந்திருந்தால், சிலப்பதிகாரத்தில் இவர்களை செங்குட்டுவன் நீலகிரியில் கண்டான் என்ற செய்தி இன்று இடம் பெற்றிருக்கும் அன்றோ?

ஆகையால் "கொங்கணர் கூத்து" என்று கூறியிருப்பது இன்று கோவ் மக்களும் தோதுவர்களும் குறும்பர்களும் ஆடும் கூத்தையே குறிப்பிட்டிருக்க வேண்டும் என்பது திண்ணம். அன்று வாழ்ந்த அந்தக் கொங்கணர்களே காலப்போக்கில் அயல் அரசனுக்குப் பயந்து "கோவ்" மக்களாக மாறி இருக்க வேண்டும் என்பதும் உறுதி.

மேலும் ஜவ்வாது மலையில் வாழும் ஆதிவாசிகள் தொண்டைமான் காலத்தில் பல மலைகளுக்குச் சென்றனர் என்பதை விளக்க இதுவரை யாராலும் முன் கண்டுபிடிக்கப்படாத ஒரு கல்வெட்டை நான் புகைப்படம் பிடித்தேன். இதில் "தொண்டைமான்" என்று இருக்கிறது. அந்த மலைவாசிகளும் "நாடு-நாடு' என்றே தங்கள் மலைகளை அன்று பிரித்து, இன்றும் சுமார் 800 மலை நாடுகளில் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் காஞ்சியிலிருந்து அன்று மலைக்கு வந்தவர்கள். நிற்க,

இங்ஙனமிருக்கும் பொழுது மைசூரை ஆண்ட இந்து மன்னர்களும் கோவையை ஆண்ட சிற்றரசர்களாகிய (1) உத்திர அரசு (2) ஊமத்த அரசு என்ற உடன் பிறந்தார்களும் நீலகிரியில் வாழும் மக்களிடம் கப்பம் கட்டும்படி கேட்டார்கள். அதற்காக நீலகிரி மக்கள் தனநாய்க்கன் கோட்டைக்குச் சென்று கப்பம் கட்டி வந்தார்கள். பிறகு அவர்கள் அந்தந்த ஊர்களுக்குச் சென்று கப்பத்தை வாங்குவதென்றும் தீர்மானிக்கப் பட்டது. அதன்படி இவர்கள் வந்து கப்பம் வாங்கும் பொழுது ஊர் மணியக்காரர் ஒரு கல்லின் மேலும், ஊர்த்தலைவன் ஒரு கல்லின் மேலும் உட்காருவதற்கு ஒவ்வொரு கல் நடப்பட்டிருக்கும். அவ்விதக் கற்களைக் கோவ் மக்களின் ஊர்களில் இன்றும் காணலாம்.

மேலும், அடிக்கடி நீலகிரிக்கு வந்து போக முடியாமல் அரசுகள், அரவேனுக்குப் பக்கததில் கலிங்காடா என்ற இடத்தில் கப்பத்தை வாங்குவதற்காக ஒரு பங்களாவைக் கட்டினார்கள். பிறகு ஆங்கிலேயர் வருகையால் பயந்து ஒரே இரவில் நெல்லியாளம் சென்றார்கள். இந்த அரசு வழிமுறையினரை இன்றும் நெல்லியாளத்தில் காணலாம். சுமார் முந்நூறு ஆண்டுகளுக்கு முன் ஆண்ட மைசூர் மன்னர்களுக்கும், கூடலூர் கோவ் மக்களுக்கும் எல்லைத்தகராறு ஏற்பட்டது. ஆகையால் இன்று "கக்கனாரை" எனப்படும் இடம்தான் இருவருக்கும் நடு எல்லை என்று தீர்மானித்ததில் அந்த இடத்தில் ஒரு வளைவு கட்டப்பட்டது.

## கோவ்களுக்கும் தோதுவர்களுக்கும் உள்ள தொடர்பு

இவர்கள் மொழி, நடை, உடை, பாவனை, அன்றாடப் பழக்க வழக்கங்கள் அனைத்தும் ஒரே மாதிரியானவை. கோவ் மக்கள் ஊர்கள் என்று பிரித்து-50-60 குடும்பங்களாக வாழ்கிறார்கள். ஆனால் தோதுவர்கள் காட்டில் மந்துகளை ஏற்படுத்திக்கொண்டு ஒவ்வொன்றிலும் 4-5 குடும்பங்களாக வாழ்கிறார்கள். பால், வெண்ணெய், நெய் வாணிபம் செய்கிறார்கள்.

கோவ் மக்களும் தோதுவர்களும் அன்று பேசி முடித்தபடி இன்றுவரையில் கோவ் மக்கள் தோதுவர்களின் இல்லங்களுக்குப் போக மாட்டார்கள். ஆனால் பெண்களோ தாராளமாகப் போகிறார்கள், வருகிறார்கள்.

கோவ் மக்கள் செய்யும் கடுக்கனைத் தோதுவர்களும் அணிந்து கொள்ளுகிறார்கள். கோவ் மங்கையர்கள் மண்டுவ் செடியைத் தலையில் வைத்துக் கொண்டை போட்டுக் கொள்கிறார்கள். இந்தச் செடியையும் பூவையும் தோதுவ மங்கையர்கள் இறந்த பின் இவர்கள்

கூந்தலில் சூட்டுவார்கள். கோவ் மக்களும் தோதுவர்களும் பிணத்தைச் சுடுகிறார்கள். சுட்ட பிறகு இறந்தவர்களின் மண்டை ஓட்டின் எலும்பை எடுத்துப் பத்திரமாகச் சுடுகாட்டில் வைத்திருந்து அதை இரண்டாம் ஈமச் சடங்குகளில் ஒன்றாகச் சேர்த்தும் பூத்துக் குளியுடன் கொண்டாடுகிறார்கள். இவ்விதச் சடங்குகளில் இறந்தவர்கள் தங்கள் வாழ்நாளில் அன்றாடம் பயன்படுத்தி வந்த பொருள்களைப் போல் செய்து சுடுகாட்டில் வைத்து எரிப்பார்கள். எடுத்துக்காட்டாக, "புகுரி"யை முக்கியமாக எரிப்பார்கள். கோவ் மக்கள் இறந்தால் பசுவையும், தோதுவர்கள் இறந்தால் எருமையையும் பிணத்தைச் சுற்றச் செய்த பின் காட்டில் விட்டுவிடுவர். இங்ஙனம் பிணத்தைச் சுற்றச் செய்யும் பசுவின் கழுத்திலும், எருமையின் கழுத்திலும் மணி கட்டுவதுண்டு. கோவ் மக்கள் சாவுச் சடங்கில் கொம்பு ஊதி வாத்தியங்கள் வாசிப்பதுண்டு. அதைப் போல் தோதுவர்களுக்கு இல்லாவிட்டாலும் கோவ் மக்கள் போய் வாசிப்பார்கள். தோதுவர்களின் யாராவது இறந்து விட்டால், இறந்த செய்தியைப் பக்கத்திலிருக்கும் கோவையாவிடம் சொல்லி விட்டு, ஒரு புத்துக் குளியும், பணமும் வாங்கிக் கொண்டு போவது வழக்கம். இது இன்றும் உண்டு. கோவ் மக்களின் திருமணச் சடங்கும் தோதுவர்களின் திருமணச் சடங்கும் ஒன்றேதான்.

இப்படி நீலகிரியில் தோதுவர்களும், கோவ் மக்களும், குறும்பர்களும் தன்னுரிமையோடு வாழ்ந்து வந்த பொழுதுதான் ஆங்கிலேயருடைய ஆட்சி கோவை வழியாக நீலகிரிக்குப் பரவியது. கோவையில் கலெக்டராக இருந்த ஜான்சால்வன் துரை என்பவர், கோவ் மக்களிடமும் தோதுவர்களிடமும் அனுமதி பெற்று கி.பி. 1820-ஆம்ஆண்டு "பெத்துக்கல்" என்ற

இடத்தில் பங்களாவைக் கட்டி வாழ்ந்தார். பாழடைந்து இருக்கும் பெத்துக்கல் பங்களாவை இன்றும் கோத்தகிரியின் அருகில் கன்னேரிமூக்கு என்ற ஊருக்கு அருகில் காணலாம்.

இங்ஙனம் நீலகிரிக்கு ஆங்கிலேயர்கள் வந்தபோதுதான் கோவ் மக்களும், தோதுவர்களும், குறும்பர்களும் கூறியது ஒன்று, கேட்டது ஒன்று, அவன் ஆங்கிலத்தில் எடுத்துக் கூறியது ஒன்று, ஆங்கிலத்தில் பருந்துக்கும் காற்றாடிக்கும் எப்படி வார்த்தை சம்பந்தமோ அப்படி ஆங்கிலேயன் புரிந்துகொண்டு எழுதியது ஒன்று ஆக இவ்விதம் மாறி, இன்று இந்திய வரலாறு தலைகீழாக மாறிவிட்டது என்று பல ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

## குறும்பர்கள்

நீலகிரி, மலபார் மைசூர், வயல்நாடு முதலிய இடங்களில் வாழும் ஆதிவாசிகளாகிய இந்தக் குறும்பர்களைப் பற்றிப் பல்லாண்டுகளாகப் பல தகவல்கள் எழுதும்போது, நீலகிரியில் ஒவ்வொரு பாடியில் தங்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அப்படி அவர்களிடம் தங்கும்போது பல பாடிகளில் பலர் பல விதமாகத் தங்கள் நடனப் பாடல்களைப் பாடிக்கொண்டு நடனமாடினர். அப்பாடல்களை எல்லாம் எழுதி, ஒன்றாகச் சேர்த்துச் சிந்தனை செய்து பல புலவர்களிடம் காட்டிச் சேர்த்து ஆராயும்போது அதில், "கச்சியும், மயிலையும் பல்லவர்" என்ற சொற்கள் பலரிடம் பல இடங்களில் கொச்சையாகப் பாடப்படுவதைக் கண்டேன். கடைசியில் பாடல்களைப் பிரித்துப் பார்க்கும்போது கலிங்கத்துப் பரணியில் இது கிடைத்தது.

"பாடீரே! பாடீரே! பாடீரே! பாடீரே!
வண்டை வளம்பதி பாடீரே
மல்லையும், கச்சியும் பாடீரே
பண்டை மயிலையும் பாடீரே
பல்லவர் தோற்றலைப் பாடீரே
காட்டிய வேழவணி வாரிக்
கலிங்கப் பரணி, நங்கா வலனைச்
சூட்டிய தோன்றலைப் பாடீரே
தொண்டையர் வேந்தனைப் பாடீரே"

(கலிங்கம் : – 520–22)

தக்கோலப் போரில் வெற்றி கொண்ட மூன்றாம் கிருஷ்ணதேவன் தொண்டை மண்டலத்தையும், திருமுனைப்பாடி நாட்டின் வடபகுதியையும் (குறும்பர்கள் இன்றும் தாங்கள் வாழும் ஊரைப் "பாடி-பாடி" என்றே அழைக்கின்றனர்) வென்று தன் ஆளுகையில் வைத்துக்கொண்டான். தான் வென்ற நாடுகளைத் தன்னுடைய பிரதிநிதிகளாகிய சில தலைவர்களைக் கொண்டு ஆட்சிபுரிந்து வந்தான்.

எனவே, அவன் "கச்சியும் தஞ்சையுங்கொண்ட கன்னரதேவன்" என்று தன் கல்வெட்டுகளில் கூறிக்கொள்வதைப் பல ஊர்களில் காணலாம்.

மேலே கூறியுள்ளவற்றை ஆதாரமாக வைத்துக் கொண்டு 12-ஆம் நூற்றாண்டில் அரசாண்ட தொண்டைமான் பேரரசின் வரலாறுகளையும், அவனால் கட்டப்பட்ட "கஜப்ருஷ்ட கோவில்' கல்வெட்டுகளையும் ஆராய்ச்சி செய்யத் தொடங்கினேன்.

தென்னிந்தியாவில் மலைகளிலும், காடுகளிலும், காட்டுமிராண்டிகளாக இன்றும் மறைந்து வாழும் குறும்பர்களுக்கு அவர்கள் கட்டி வாழ்ந்த கோட்டைகள் தென்னிந்தியாவில் இருக்க வேண்டுமென்ற எண்ணம் என் உள்ளத்தில் நீண்ட நாட்களாகக் குடி கொண்டிருந்தது. அவ்வண்ணமாகவே-எங்கு சென்றாலும், அதைப்பற்றிய தகவல்கள் கிடைக்குமா என்று அலைந்த எனக்கு அண்மையில் ஒரு பெரியவரை இரயில் நிலையத்தில் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது. அவரிடம் பேசிக்கொண்டே வந்த பின் அவர், "நான் ரெட்ஹில்சுக்குப் போக வேண்டும். பழைய காலத்தில் அங்கு குறும்பர், கடம்பர், கண்டர் என்ற ஒருவித முரடரானவர்கள் கோட்டை கட்டிக்கொண்டு மக்களைத் துன்பப்படுத்தி வாழ்ந்தார்கள். அவர்களுடைய கோட்டைகளில் தண்ணீர் தேங்கி நிற்கிறது. அத்தண்ணீரைத்தான் குழாயின் மூலம்

சென்னை நகருக்கு அனுப்புகிறார்கள். உங்களுக்கு ஏதாவது ஆதாரங்கள் வேண்டியதாக இருந்தால், வட திருமுல்லைவாயில் கோயிலின் கல்வெட்டுகளை ஆராய்ந்தால் குறும்பரைப் பற்றிய தகவல்கள் கிடைக்கும்" என்று கூறினார்.

இதைக் கேள்விப்பட்டதும், புகைப்படங்கள் எடுக்கவும் மற்றக் குறிப்புகள் எழுதவும் வேண்டியவற்றை எடுத்துக்கொண்டு, திருமுல்லைக் கொடியாளைக் காணச்சென்றேன்.

அப்போது பல எண்ணங்கள் என் உள்ளத்தில் உதயமாயின. இன்று தன-நாயக்கன் கோட்டையின் மேலும், கோயிலின் மேலும், பவானி அணைக்கட்டின் தண்ணீர் தேங்கி நிற்பதைப்போல், அன்று குறும்பர்களின் கோட்டையின் மேலும், இன்று 'ரெட்ஹில்ஸ்' தண்ணீர்த் தேக்கம் இருக்கிறது போலும் என்று நானே என் ஐயத்தைச் சரிப்படுத்திக் கொண்டேன்.

சென்னையிலிருந்து மேற்கே ஏறக்குறைய 20 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள அம்பத்தூர் இரயில் நிலையத்தில் இறங்கினேன். அம்பத்தூரிலிருந்து 4 கிலோ மீட்டர் நடக்க வேண்டுமென்று கூறியதால் வேறு வழி இல்லாமல் நடக்கத் தொடங்கினேன். சிறிது தொலை நடக்கும்போது ஒரு ஆங்கிலேயரின் கார் வருவதைக் கண்டு அதை நிறுத்தி, என்னை ஏற்றிக்கொள்ளும்படி கேட்டேன். அன்னாரும் அதற்கு இசைந்தார். காரில் போகும்போதே கோயிலின் கோபுரமும், கோபுரத்தின் மேல் புறாக்கள் பறப்பதும் காட்சி அளித்தன.

கோயிலுக்குப் போவதற்கு முன் வழியில் பெரிய பிள்ளையாரின் கோயிலொன்று கற்றூண் மண்டபத்துடன் இருக்கிறது.

## வரலாற்றுச் சான்றுகள்

சீர்காழிக்குக் கிழக்கே 15 கிலோ மீட்டர் தொலைவில் திருஞானசம்பந்தர் தேவாரம் பெற்ற 'தென் திருமுல்லைவாயில்' என்னும் கோயில் இருப்பதால், இதற்கு "வட திருமுல்லைவாயில்' எனப்பெயரிடப் பட்டது. இதை சுந்தரமூர்த்தி நாயனார் பாடியுள்ளார். இது பண்டையில் நீர் வளமும், நில வளமும் பொருந்திய இயற்கைக் காட்சிகளை உடையதாகவும், விலங்குகள் நிறைந்து வாழ்ந்த இடமாகவும் இருந்தது. மனிதர்கள் வாழ்வதற்கு எல்லா வசதிகளும் ஆதிகாலம் தொட்டே இவ்வூரில் இருந்ததால், அன்று முதல் இவ்வூரில் மக்கள் வாழ்ந்து வந்ததற்குப் பல ஆதாரங்களும் இருக்கின்றன.

தென்னிந்திய வரலாற்றில் மிக முக்கியத்துவம் பெற்ற இடமாக இனிது விளங்குவது இத்திருமுல்லைவாயில். பண்டைக் காலத்தில் நாடாண்ட பல வேந்தர்களும், புணியாற்றிய பல தலைவர்களும், இங்குப் பல கோட்டைகளையும், ஆலயங்களையும் அமைத்துப் பெரும் பயன் அடைந்தார்கள். இத்தலம் கிருதயுகத்தில் "இரத்தினபுரம்" என்றும், திரேதா யுகத்தில் "பில் வரண்யம்" என்றும், துவாபர யுகத்தில் "சண்பகாரண்யா" என்றும், கலியுகத்தில் "மாலதிவனம்" என்றும், ஒவ்வொருயுகத்தில் ஒவ்வொரு பெயருடன் விளங்கியதாகத் தெரிகின்றது.

## குறும்பர்களுடன் போர்

சென்னை, வட ஆற்காடு, சித்தூர், செங்கற்பட்டு ஆகிய மாவட்டங்களை ஒருங்கு சேர்த்துத் தொண்டை மண்டலம் என்ற பெயரில் தொண்டைமான் அரசு புரிந்து வந்தான். தொண்டைமான் வரலாற்றில் மிகவும் புகழ் பெற்றவன். அவன் திருவல்லிக்கேணியிலிருந்து திருமுல்லைவாயில் உட்பட திருப்பதி வரையிலுமுள்ள கோயில்களில் சிலவற்றைப் புதியதாகக் கட்டியும், சிலவற்றைப் புதுப்பித்தும், வேறு சிலவற்றைச்

சீர்திருத்தியும், கோவிலைத் திருத்தொண்டு செய்தான். இத்தகைய தொண்டைமான் ஒருமுறை குறும்பர், கண்டர், கடம்பர் என்பவர்களோடு சண்டை செய்து தோற்று தன் யானையின் மேல் ஏறிக்கொண்டு உயிர் தப்பி ஓடிவந்த பொழுது, இத்தலத்தில் அடர்ந்திருந்த முல்லைக் கொடிகள் யானையின் காலில் சுற்றிக் கொண்டு தடைப்படுத்தின. உடனே தொண்டைமான் அக்கொடைகளைத் தன் வாளினால் வெட்டினான். வெட்டிய இடத்திலிருந்து குருதி பெருகுவதைக் கண்டு கலங்கிக் கண்ணீர் விட்டான். கொடிகளைப் புரட்டிப் பார்த்தான். கீழே ஒரு சிவலிங்கத்தைக் கண்டான். அதன் உச்சியில் தன் வாளின் வடுவினைக் கண்டான். நடுநடுங்கிக் கீழே விழுந்தான். அதனைக் கண்ட சிவபெருமான், "வருந்தாதே! எனக்கொன்றும், யாராலும் தீங்கு செய்ய முடியாது. நான் மாசிலாமணி. நந்தி தேவரை அனுப்பி உன் எதிரிகளை அழிக்கிறேன்" என்று கூறி நந்தியை அனுப்பி குறும்பர், கண்டர், கடம்பர் முதலிய எதிரிகளை அழித்தார். ஆகையால் தான் இத்தலத்திலிருக்கும் நந்தி, மற்ற கோவில் களிலிருக்கும் நந்தியைப் போல் அல்லாமல் சிவலிங்கத்தினை நேர்முகமாகக் காணாது எதிர் முகமாகத் திரும்பி இருக்கும் காட்சியை இன்றைக்கும் காணலாம். அதை விளக்க :

"ஆலயங் காவல் சூழ் அருள் நந்தி தன்னைச்
சாலவே தொண்டைமான் பின்னுடன் துணைபோய்
மேவிய ஜெயத்துடன் விரைந்து வாவெனக்
காவல்–சூழ் நந்தி கணமதில் சென்று
வாணனும், ஞணனும் மயங்கவே ஜெயித்துத்
தாணிவின் பதந்தனில் சரண் என வணங்கினான்"

இப்பழம் பாடல் நன்றாக விளக்கம் தருகிறது. தொண்டைமானும் மிக மகிழ்ந்து கோவில் குளம் முதலிய பணிகளைச் செய்தான். குறும்பர், கடம்பர்,

கண்டர் இவர்கள் பூஜித்து வந்த பைரவ மூர்த்தியின் சிலையைக் கொண்டு வந்து தொண்டைமான், இக்கோவிலில் பிரதிஷ்டை செய்தான் என்று வரலாறு கூறுகிறது. அவர்களிடமிருந்து கொண்டு வந்த இரண்டு வெள்ளெருக்குத் தூண்களை இன்றும் இக்கோவிலினுள் காணலாம். இறைவன் - நிர்மலமணீசுவரர். அம்பிகை - கொடியிடை நாயகி. இக்கோவில் சிற்பங்களும், உயரிய மதிற் சுவர்களும் உடையதாய், ஊரின் நடுவில் அமைந்திருக்கிறது.

ஊர் சிறியதாக இருந்தாலும், இக்கோவிலின் புகழ் பெரியதாகவும், பல விஷயங்கள் அடங்கியதாகவும் இருக்கிறது. இக்கோவில், யானையின் பின்புறம் போன்ற அமைப்பில் இருப்பதால், இது "கஜ ப்ருஷ்ட ஆலயம்" என்று கூறப்படுகிறது. இம்மாதிரியான கோவில்களை அமைக்கும் முறை தமிழ்நாட்டில், ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே வழக்கத்திலிருந்தது. தமிழ் மொழியில் எழுதப்பெற்ற மிகப்பழமை வாய்ந்த சொற்றொடர்கள் அங்குக் காணப்படுகின்றன.

'அன்று இவ்விடங்களில் எல்லாம் வாழ்ந்த அந்தக் குறும்பர்கள் இன்று எங்கே?' என்ற கேள்வி உதயமாகிறதன்றோ? போரில் நாட்டை இழந்த குறும்பர்கள் பல மலைக்காடுகளை அடைந்து பல ஊர் மொழிகளைக் கற்று வாழத்தொடங்கினர். மேலும் வட ஆற்காட்டில் ஆரணிக்கு மேற்கே ஆறு மைல் தூரத்தில் "படை வீடு' என்ற நகரத்தை குறும்பர் குலத்தைச் சேர்ந்த அரசர்கள் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி புரிந்தனர். ஆனால் தொண்டைமான் குறும்பரை வென்று, அவர் படைவீட்டை அழித்தான் என்று வரலாறு கூறுகிறது. "இன்று இவ்வூர் அழிந்து விட்டது" என்று பலர் கூறுகின்றனர். இன்றும், சில குறும்பர்களின் வழிமரபினர் சில நகரங்களில் பல தொழில்கள் செய்து வாழ்ந்து வருகிறார்கள் என்பதைக் கண்கூடாகக் காண்கின்றோம்.

## பேசும் பாறைகள்

*மேலை நாட்டினர் தோலிலும் துணியிலும் எழுதி வைத்தனர். ஆனால் தமிழனோ என்றும் அழிந்து போகாதவாறு, பாறைகளைக் கொண்டு அதில் எழுதி வைத்தான். அப்பாறைகளே ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின் பேசும் பாறைகளாக மாறி இருக்கின்றன. அவைகளும் பேசாவிட்டால் இன்று தமிழனின் வரலாறு, தமிழனின் பண்பாடு முதலியவை அழிந்து போகுமன்றோ? நாம் இதற்கு நம் மூதாதையர்களுக்குக் கோயில் கட்டி அல்லவோ வணங்க வேண்டும்!*

*இத்திருக்கோயிலில் மொத்தம் இருபத்து மூன்று கல்வெட்டுகள் இருக்கின்றன. அவற்றில் சில கோயிலுக்கு ஆடுகள் கொடுத்ததையும், நிலங்கள் கொடுத்ததையும், அரசர்கள் செய்த தொண்டுகளையும் இன்று எடுத்துரைக்கின்றன.*

*அதில் கி.பி. 975-ல் உள்ள ஒரு கல்வெட்டு உத்தமச் சோழ அரசனைப் பற்றியும், மண்டபம் இராஜேந்திர சோழனால் கட்டப்பட்டதையும், சோழர் மரபில் வந்த குலோத்துங்கன், இராஜராஜன், விஜயநகரத்துப் புக்கராயன், ஜடாவர்ம சுந்தர பாண்டியன் முதலியவர் களின் பெயர்களையும், சுந்தரமூர்த்தி நாயனார் இக்கோயிலில் வந்து இறைவனைப் பாடிப் புகழ்ந்ததையும் இறைவன் தொண்டைமானுக்கு நந்தியின் மூலம் அருள் புரிந்ததையும் விளக்குகின்றது.*

*ஹைதர் அலி சென்னையின் மேல் படை எடுத்தபொழுது அது மிக அழிவுற்றது. 1805-ஆம் ஆண்டு முதற்கொண்டு இது பழைய நிலையையடைந்து வருகிறது. இவ்வாலயத்தின் கல்வெட்டு பண்டைக் காலத்தில் குறும்பர்களும், கண்டர்களும், கடம்பர்களும் சென்னைக்கு அருகில் கோட்டை கட்டிக்கொண்டு வாழ்ந்தார்கள் என்றும், தொண்டைமான் நந்தியின் உதவியால் அவர்களின் கோட்டையையும் அழித்து, அவர்களையும் காடுகளுக்குத் துரத்தி இருக்க வேண்டும் என்றும் திண்ணமாக எடுத்துக்காட்டுகிறது.*

# கொங்கு மலை எங்கள் மலை

செங்குட்டுவன் காலத்தில் தமிழ்ப் பெருவேந்தர்கள் தவிர குறுநில மன்னரும் அரசாண்டார்கள். எனவே அதில்,

1. கொங்கிளங் கோசர்.

2. நூற்றுவர் கன்னரர்.

3. கயவாகு-என்பவர்களும் கணக்கிடப்படுவர். கொங்கிளங் கோசர் என்பவர் வீரம் மிக்க பழைய மரபினர். இவர் அரசாண்ட நாடுகள் "கொங்கு" என்பது மேல் கொங்குநாடும், குடகு மைசூர் பகுதிகளும் அடங்கிய, "கங்க தேசமாகும்." கங்க தேசத்து அரசர்களை கொங்கு தேச ராஜாக்கள் என்பர். இவ்வுண்மை-

"பெருஞ்சிறைக் கோட்டம்
பிரிந்த மன்னரும்
குடகக் கொங்கரும்,
மாளுவ வேந்தரும்
கடல்சூழ இலங்கைக்
கயவாகு வேந்தனும்
எந்நாட்டு ஆங்கண்
இமய வரம்பனின்—
நன்னாள் செய்த நாளணி
வேள்வியில்
வந்தீக" என்றே வணங்கினர் வேண்ட.

(சிலம். வரந்தரு காதை : 158–168)

எனச் சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் கூறுவதினின்று விளங்கும். இதனால் தமிழ் அரசர்களின் ஆட்சி குடகு, துளு நாடுகளில் செங்குட்டுவன் காலத்திலேயே பரவியிருந்தது என்பதும் புலனாகிறது. மேலும், அசோகன் காலத்தே, தென்னாட்டில் தன்னாட்சி தெரிந்து ஆண்டது சோழர், பாண்டியர், சதிய புத்ரர், கேரள புத்ரர், தாம்பர பர்ணி (இலங்கை) அர்சர் என்பவரென்று அசோகருடைய முதற் சாஸனத்திலிருந்து அறியப்படுகிறது. (அசோகனுடைய சாசனங்கள் பக்கம் : 94)

மேற்கூறிய மரபினருள் சதிய புத்திரர்களும் தமிழர் என்றும், அவருடைய நாடு துளு நாடே என்பதும் தெரிகின்றது. இவர்கள் அன்று தமிழர்களாகவே இருந்து ஆண்டனர் என்பதை இன்று அந்நாட்டில் ஆங்காங்கே வீரக்கல்லும், நடுகல்லும் நாட்டி இருப்பதைக்கொண்டு அறியலாம்.

தமிழகம் என்பது மிகப்பழங்காலத்திலிருந்தே மூவேந்தர்களால் ஆளப்பட்டு வந்தது என்பதை "வண்புகழ் மூவர் தண் பொழில் வரைப்பின்" என்று இரண்டாயிரமாண்டுகளுக்கு முன்னே தொல்காப்பியனார் கூறுகிறார். சேர, சோழ, பாண்டியர் என்னும் இம்மூவேந்தர் நாடுகளும் முறையே குடபுலம், குணபுலம், தென்புலம் என்று வழங்கப்படும். அது -

"குட புலங்காவலர் மருமான்
குண புலங்காவலர் மருமான்
தென் புலங்காவலர் மருமான்"

(சிறுபாணாற்றுப்படை : 47)

எனக்கூறுவதிலிருந்து விளங்குகின்றது. இதனால் அவற்றுள் சேரநாடு என்பது சேலம், கோவை, நீலகிரி மாவட்டங்களும், கடன்மலை நாடான மலையாளமும் அடங்கிய நிலப்பிரிவு என்பது திண்ணம். செந்தமிழ் நாட்டினைச் சேர்ந்த நிலங்களாகப் பண்டைக்காலத்துக்

கொ. 4.

கருதப்பட்ட பன்னிரு நிலங்களில குட்டம், குடம், கற்காபூமி, மலாடு என்பவை இச்சேர நாட்டுப் படைகளைச் சேர்ந்தவை. குட்டுவன், குடக்கோ, பூழியன், மலையன் என வழங்கிய பெயர்கள் சேருருடைய பழமையான பெயர்களாய் விளங்குகின்றன என்பது -

“குணவாயிற் கோட்டத்து
அரசு துறந்து இருந்த
குடக் கோச்சேரல்
இளங்கோவடிகட்குக்
குன்றக் குறவர் ஒருங்கு உடன்கூடிப்
போலம் பூவேங்கை, நல்கினர் கொழுநிழல்,
ஒரு முலையிழந்தாளோர், திருமா பத்தினிக்கு
அமரர்க்கு அரசன் தமர்வந்து ஈண்டு–அவள்
காதல் கொழுநனைக், காட்டிய வளொடு எங்
கட் புலங்கான விண் புலம் போயாது
இறும்பூது போலும்”

**(சிலப்பதிகாரம் : பதிபு – 1)**

என்பன போன்ற அடிகளிலிருந்து அறியலாம்.

சங்க காலத்திலிருந்த சேர நாட்டில் அடங்கிய நீலகிரி, சேலம், கோவை ஆகிய பகுதிகளுக்குக் “கொங்கு நாடு” எனப்பழைய பெயர் உண்டு என்பது வரலாற்றுச் சான்றாகும். எனவே இம்மன்னன் கோமான், கொங்கன், கொங்கர்கோ என்று பெயர் பெற்றான்.

இச்சேர நாட்டு மலைகளுள் கொல்லி மலையும், அயிரையும் அடங்கியவை எனக்கூறுதல் வேண்டும். நீலகிரியிலிருக்கும் இக்கொல்லி மலையை, இன்று நீலகிரியில் வாழும் தொல் குடிகளாகிய கோத்தர்கள் தங்களுடைய தொன்மையான மலை என்று கூறுகின்றனர்.

பழனி மலைத்தொடரும், இச்சேரர்க்குரியதே இவற்றுள் அயிரை என்பது ஆனைமலைத் தொடர்களுள் ஒரு பகுதியாகும். எனவே ஆனை மலையில் வாழும் ஆதிவாசிகளும் தமிழர்கள் என்று வரலாற்றின் வாயிலாகக் கொள்ள வேண்டும். நீலகிரியின் தலைநகரமாகிய உதகை, கடல் மட்டத்திற்கு மேல் 7758 அடி உயரத்தில் உள்ளது. அது "ஒத்தைக் கல் மந்து" என்று தோதுவ மொழியில் சொல்லப்படுகிறது.

இவ்வட்டாரத்தில் குடியிருக்கும் பழங்குடிகளுள் தோதுவர், கோத்தர், குறும்பர், இருளர் ஆகியவர்கள் முக்கியமானவர்கள்.

தோதுவர், கோத்தர்களின் செல்வம் இவர்களுக்கு உடைமையான எருமை மந்தைகளின் எண்ணிக்கையைக் கொண்டு மதிப்பிடப்படுகின்றது.

பல்லாண்டுகளுக்கு முன் லார்டு இர்வின் பிரபு உதகைக்கு வருகை புரிந்தார். அன்று உதகையில் வாழ்ந்த தோதுவத்தலைவனுக்கு அவர் இராஜப்பிரதிநிதி என்றும், "செல்வமுடையவர்" என்றும் அறிமுகப் படுத்தப்பட்டார்.

"பிரபு, செல்வரென்றால் அவருக்கு எருமை மந்தைகள் எத்தனை உண்டு?" என்று கேட்டானாம் அந்தத் தோதுவத் தலைவன்.

"எருமை மாடுகள் இல்லை ஆனால் நிறையப் பொன், வெள்ளி நாணயங்கள் உண்டு!" என்று பதில் கூறினார்கள்.

"அவருடைய செல்வத்தைக் கொண்டு நீலகிரி ஆதிவாசிகளிடமிருக்கும் எல்லா எருமைகளையும் வாங்கலாம்!" என்று கூறிய பிறகுதான் தோதுவத் தலைவன் இர்வின் பிரபுவைச் செல்வச்சீமான்தான் என்று ஒப்புக் கொண்டானாம்.

எனவே தோதுவர்களின் சொத்தும், கோத்தர்களின் சொத்தும், அவர்கள் வளர்க்கும் ஆயிரக்கணக்கான எருமை மந்தைகள் தான் என்பது விளங்குகின்றதன்றோ?

இன்றும் இவர்களின் ஊர்களில் ஆயிரக்கணக்கான எருமைகள் உண்டு.

மந்தையைக் காத்து, அதன் மூலமாய் வாழும் இத்தோதுவர்களின் இருப்பிடங்களுக்கு மந்து என்று பெயர் வந்துள்ளது.

நீலகிரியில் வாழும் தோதுவர்கள், கோத்தர்கள்தான் இப்படி மாடுகளையும், எருமைகளையும் செல்வமாக மதிக்கின்றனரா? அல்லது உலகின்கண் மற்ற மக்களும் எருமைகளையும் மாடுகளையும் செல்வமாகக் கருதுகிறார்களா? என்று ஆராயும்போது பண்டைக் காலத்தில் உலகில் மாட்டு மந்தைகளை அதிகமாக வைத்திருப்பவன், பெரிய செல்வந்தனாகக் கருதப் பட்டான் என்றும், நாணயங்கள் உண்டாவதற்கு முன், மக்கள் பண்டமாற்று செய்தார்கள். அதிக மதிப்புள்ள பொருள்களை வாங்குவதற்கு நாணயங்களுக்குப் பதிலாக மாடுகளைக்கொடுத்தனர் என்றும் வரலாறுகள் கூறுகின்றன. இந்தியாவிலும் மாட்டைச் செல்வமாகக் கருதியதாகச் சங்க கால நூல்கள் கூறுகின்றன!

மேலும் "மாடு" என்றால் இந்தியர்களுக்கு ஒரு தனி பக்தி அதனிடமுன்டு. சிலர் அதைத் தெய்வமாகவும் வணங்குகிறார்கள்.

பத்துக் கட்டளை என்ற கிறிஸ்து மதக்கட்டளை வருவதற்கு முன் இஸ்ராயேல் மக்கள் பசுவின் கன்றையே வணங்குகிறார்கள். இதனால் மிகமிகப் பழைய காலம் முதல் மாட்டுக்கு மதிப்புண்டு என்று தெரிகின்றதன்றோ?

பண்டைக் காலத்தில் கிரேக்கர்களும் மாட்டை செல்வமாகக் கருதினார்கள். "நாணயம்" உண்டானதும் அதற்கும் "மாடு" என்றே பெயர் கூறி, அந்த நாணயத்தின் மேல் மாட்டின் உருவத்தையே பொறித்திருந்தனர் என்று கிரேக்க நாட்டு வரலாறு கூறுகிறது.

"மாடுதானது இல்லெனில் மானிடர் பாடுதான் செல்வாரில்லை" என்று அப்பர் கூறினார்.

இந்தியாவிலும் இன்று பெண்களுக்கு மாட்டைச் சீதனமாகக் கொடுக்கின்றனர். ஆகையால் தோதுவர்களும் அங்ஙனம் கருதியதில் வியப்பில்லை.

ஆங்கிலேயர்கள் முதன்முதலில் நீலகிரிக்கு வந்தபோது ஒருபெரிய பாறைக்கு அருகில் அமைந்திருந்த ஓர் மந்துவின் பெயர்தான் "ஒத்தைக் கல் மந்து." ஒரே கல்லை நாட்டித் தோதுவர்கள் வணங்குவதாலும் "ஒத்தைக் கல் மந்து" என்று பெயர் உண்டானது. அதன் நினைவுச் சின்னமாக, அப்பாறையை உடைத்துக் கட்டப்பட்ட வீட்டுக்குத்தான் "கல் மாளிகை" என்று இன்றும் பெயர் வழங்குகிறது.

உதகை விரிவடைந்ததின் காரணமாகப் பண்டைக் காலத்தில் அத்தோதுவர் பாறையிருந்த இடமே இன்று "பழைய உதகை" என்று வழங்கப்படுகிறது.

நீலகிரியில் "கோத்தர்கள்" என்று மற்றொரு பழங்குடி மக்கள் வாழ்கிறார்கள். இக்கோத்தர்கள் தோதுவரைத் 'தொன்' என்று அழைக்கின்றனர்.

தொல் + மை = தொன்மை என்பது போல, "தொல் காலத்தவர்" என்று பொருள்பட, "தொன்வர்" என்னும் சொல் தமிழிடைப் பிறந்து, பிற்காலத்தில், தோதுவராக மாறியது போலும், தோதுவர்களின் இனத்தில் ஒரு பெண்ணுக்குப் பல கணவன்மார்கள் இருப்பதால், இதிகாச காலப் பஞ்ச பாண்டவர்களென்றும் தங்களைச் சொல்லிக் கொள்கின்றனர். தோதுவர்களின் மொழி யிலுள்ள சொற்கள் பெரும்பாலும் பழங்காலத் தமிழ்ச் சொற்களாய் இருப்பதை இன்றும் காணலாம். வெல்லம் என்பதற்குத் தோதுவர்கள் கப்போட் என்கின்றனர். கருப்புக் கட்டி என்ற சொல், 'கருப்பிட்டி' என்று மாறி, பிறகு 'கப்போட்'டாக மாறியது என்பதற்கு இடமுண்டு. உன்னுடையது அல்லது உனது என்பதற்குத் தோதுவர்கள் "நின்த்" என்று உச்சரிக்கின்றனர். இதனால் "நினது" என்பது திரிபுற்று நின்த் என்று ஆயிற்று.

"இவன்த்? அவன்த், என்த்" போன்ற சொற்களை மிகுதியாகத் தாங்கள் பேசும் தோதுவ மொழியில் பயன்படுத்துகின்றனர்.

"இங்குவா" என்பது "இட்பா (Fa)" என்றும் "அங்குபோ" என்பது "அடபோ (Fo)" அல்லது "அட்கட்" என்றும் உதகையின் குளிரின் கடுமையில் சற்று ஒலிப்பு மாறியுமிருக்கலாமன்றோ?

மேலும் ஒரு மந்திலிருக்கும் தோதுவர் மொழிக்கும் மற்றொரு மந்திலிருக்கும் தோதுவர் மொழிக்கும் இடையே சென்னை, திருநெல்வேலி, தஞ்சை, இலங்கை முதலிய இடங்களில் வாழும் ஒரே தமிழர்கள் பேசும் தமிழ் மொழியிலிருக்கும் வேற்றுமைகளைப் போலவே, சற்று மாறுபாடு உள்ளது.

ஒலிப்புகள் மாறினாலும், "வா, போ, கட" என்னும் தமிழ்ச் சொற்கள் மாறாமையை இத்தோதுவர்களின் மொழியில் காணலாம். இத்துடன் "இட், அட்" என்பவைகள், "இஃது,அது, அஃது" என்னும் பண்டைக் காலத் தமிழ்ச்சொற்களின் தொடர்புடையவை எனக்கொள்ளவும் இடமிருக்கின்றது.

"அவன்த், இவன்த், என்த், உன்த், நின்த்," என்பதையும், இட், அட், எட் என்னும் சுட்டெழுத்துக்களும் மிகத் தெளிவாய் தமிழ்ச் சொற்கள் எனக்காட்டுகின்றன. "உண்" அல்லது சாப்பிடு என்பதற்கு, "உண்டா" என்றும், குழம்புக்குக் "கோர்ம்" என்றும், சோற்றுக்குத் "தோர்று" என்றும், எருமைக்கு "எர்" என்றும் அதை "ஏறு" என்றும் பெயர் கூறுகின்றனர்.

"கூப்பிடு" என்பதைப் "பிளேடு" என்கிறார்கள். காவியம்-காப்பியம், தவு-தபு என்பவற்றைப் போல வகரம், பகரமாகத் திரிந்து "விளியிடு" என்னும் சொல் "பிளேடு" எனத் திரிந்திருத்தல் கூடும். மேலும் தோதுவ ஆண்கள் எல்லோருமே "குமண்" என்னும் சிறிய துணியைக் கட்டாமல் வீட்டு வாசலைத் தாண்டமாட்டார்கள். "குமண்" என்பது கோவணம் என்னும் தமிழிலிருந்து தோன்றியதே. இன்னும் தங்கள் கணவன்மார்களைத் தோதுவப் பெண்கள், "ஆள்" என்று அழைக்கின்றனர்.

இதற்குக் காரணம் ஆள் "ஆண்மை" உள்ளவன் என்பது. தோதுவர்களுக்குள் மங்கையர்கள் வயதில் பெரிய ஆண்களை வணங்கும் விதமே ஒரு தனிக்கலை.

பெண்கள் வயதில் பெரியவரின் அருகில் சென்று வணங்க, பெரியவர் காலைத் தூக்கி, வணங்கும் பெண்ணின் நெற்றியில் வைப்பார். இதனைக் கால்மேல் புகுத்தி என்பார்கள். மேலும் தோதுவர்களின் கிராமப் பஞ்சாயத்துக்கு "நேயம்" என்ற சொல்லிலிருந்து வந்ததே என்கின்றனர். ஒற்றை அடிப்பாதையைக் கால் வல் என்பார்கள். அதாவது "கால் வழி" என்ற தமிழிலிருந்து வந்தது.

குப்பைக்குக் "கிப்" என்கிறார்கள். 'கிப்' என்பது தமிழிலிருந்து தோன்றியது. நான் தோதுவர்களின் மந்தில் தங்கிப் பழகியதில்-அவர்களின் உடைகளையும் சில பழக்க வழக்கங்களையும் கவனித்ததில், அவற்றைப் பண்டைக்காலத்தில் அராபியர், கிரேக்கர், ரோமானியர், சீனர் முதலியவர்கள் இந்தியாவில் வந்து வாணிபம் செய்த போது, அவர்களிடமிருந்து கற்றுக் கொண்டார்களோவென்று ஐயப்பட வேண்டியிருந்தது. மேலும், தோதுவர்கள் கிரீஸ், பாலஸ்தீன், பெர்ஷியா முதலிய நாடுகளின் மக்களைப் போன்று மேற்போர்வை ஒன்றே போர்த்திக்கொண்டும், தலைமுடியும் தாடியும் மீசையும் வளர்த்துக்கொண்டும் இருப்பதாலும், தோதுவர்களின் பெயர்கள், "நாரிக்கன், ஈஷ்கின், கெதாஷ், தார்ஸ்கூ, புஸ்கூ(டு) இனாஷ், தெர்கூ(டு) பில்ஜின், பிஷ்யோன்" என விவிலிய நூலில் காணப்படும் எபிரேயர்களின் பெயர்களையும், கிறிஸ்துவ பழைய வேதாகமத்தில் காணப்படும் பெயர்களையும் ஒத்திருப்பதாலும், பல்லாயிரமாண்டுகளுக்கு முன் பாலஸ்தீன் சாலமோன் அரசன் காலத்தில் எருசலேம் தேவாலயத்திற்காகப் "பனி மூட்டுகள்" சேகரிக்கச் சென்ற யூதர்களில் இவர்களும் ஒரு கூட்டத்தினராய் இந்தியாவில் தங்கியவர்களாய் இருக்கக்கூடும். இந்துதேசம் முதல் எத்தியோப்பியா தேசம் வரைக்கும்

இருந்த நூற்றிருபத்தேழு நாடுகளையும் அரசாண்ட "அகாஸ்வேரு" என்ற அரசன் தன் நாட்டில் நூற்றிருபத்தேழு நாட்டு பிரபுக்களுக்கும் செய்தி அனுப்பி ஒரு விருந்து நடத்தினான். விருந்துக்கு வந்திருந்த மற்ற நாட்டுப் பிரபுக்களுக்குத் தன் அரசியாகிய வஸ்தியை அறிமுகப்படுத்த அரச அவைக்கு வருமாறு அரசன் அழைத்தான் அவள் வர மறுத்தாள். நாட்டுச் சட்டப்படி அவளை நீக்கி, அரசன் ஒரு கட்டளையை விடுத்தான். "எந்தக் கணவனும் தன் இல்லத்திற்குத் தானே அதிகாரியாய் இருக்கவேண்டும்." அதை அந்தந்த நாட்டுப் பிரிவினர் பேசும் மொழிகளிலும் எழுதி வைக்க வேண்டுமென இந்து தேசம் முதல் எத்தியோப்பியா தேசம் வரையிலும் அக்கட்டளையை எழுதி அனுப்பினான். பிறகு "அகாஸ்வேரு - "எஸ்தர்" என்பவளை மணந்தார்" என்பது கிறிஸ்துவ மறை நூலாகிய பழைய ஏற்பாட்டில் எஸ்தர் வரலாற்றுச் சான்று கூறுகின்றது. (அகாஸ்வேறு அரசாண்ட காலம் கி.மு. 486 - 465 வரையில்) பல ஆண்டுகளுக்கு முன் ஏற்பட்ட இக்கட்டளைதான் இன்றும் தோதுவ ஆண்களைத் தோதுவமங்கையர்கள் வணங்கினால் ஆண்கள் தங்கள் காலைத் தூக்கி, அவள் தலையின் மீது வைத்து, "நீ ஆண் இனத்திற்கு அடிமை" என்பதைக் காட்டுகிறது போலும்.

மேலும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்ககால நூல்களில் இந்த நீலகிரி மலையில் பன்னிரண்டாண்டுகளுக்கு ஒரு முறை பூக்கும் குறிஞ்சிப் பூவைப் பற்றிய செய்தி கூறப்படுவதால், இந்த நீலகிரி இரண்டாயிரமாண்டுகளுக்கு முன்பே மக்களிடம் தொடர்பு கொண்டதாய் இருந்திருக்க வேண்டுமென்பதில் ஐயமில்லை. மேலும், கி.பி. முதல் நூற்றாண்டில் பார்த்தியர் இந்தியாவின் மீது படையெடுத்துத் தங்கள் ஆட்சியை இந்தியாவின் வடக்குப் பாகத்தில் ஏற்படுத்தினார்கள் என்றும், அர்ச் தோமையர் முனிவர் பார்த்தியருக்கு வேதம் போதித்த

பின் பார்த்தியர்கள் ஆண்ட இந்தியாவுக்கும் வந்தார். அங்கு சுமார் கி.பி. 46-48 இல் அரசாண்ட "கொந்தபோரஸ்" என்பவனைச் சந்தித்தார் என்றும் இந்திய வரலாறுகள் கூறுகின்றன.

அர்ச் தோமை முனிவர் பழைய எத்தியோப்பிய நாட்டின் வழியாகக் கொண்டு இந்தப் பேருரைகள் ஆற்றிக்கொண்டு இந்தியப் பெருங்கடல், அரபிக்கடல் வழியாக மலையாளக் கரையில் கி.பி. 52-ஆம் ஆண்டு வந்து சேர்ந்தார்.

மார்க்கோ போலோவும் தம் குறிப்புப் புத்தகத்தில் "தோமையர் இந்தியாவுக்கு வருமுன் எத்தியோப்பியா நாட்டுக்குச் சென்றார் என்று மலையாள நாட்டு மக்கள் கூறினார்கள்" என்று எழுதியுள்ளார்.

இந்தக் குறிப்புக்களை வைத்துக் கொண்டு ஆராய்ச்சி செய்தால் "தோதுவர்கள் வெளி நாட்டிலிருந்து வந்து குடியேறி இருக்க முடியாது" என்று கருத இடமுண்டாகிறது அன்றோ? ஏனென்றால் இரண்டாயிரமாண்டுகளுக்கு முன் எழுதிய நூலில் நீலகிரியில் பூக்கும் குறிஞ்சிப் பூவைப்பற்றி எழுதியவரும், மலையாள நாட்டில் வந்த அர்ச் தோமையரும், மார்க்கோ போலோவும், பாடல் பெற்ற இடங்களைப் பாடிய பக்தர்களும், இந்தத் தமிழர் அல்லாத தோதுவர்களைப் பாடாமலும், எழுதாமலுமா விட்டிருப்பார்கள்? ஏன் விட்டார்கள் என்ற கேள்வி எழுகிறதன்றோ? அவர்களும் மலையில் வாழும் மற்றவர்களைப் போல் தமிழர் என்று நினைத்து விட்டனர் போலும்.

மேலும் 'இங்கு, அங்கு, எங்கு' என்பவைகளுக்கு, "இல்லி, அல்லி, எல்லி' என்னும் கன்னடச் சொற்கள் இருந்தும் - இத், அத், எத் என்னும் சொற்களே படகர்களின் மொழியில் மிகுதியாக வருகின்றன.

எக்காரணங்கள் எங்ஙனமிருந்தாலும் சரி-இவர்கள் நீலகிரியின் பண்டைத் தமிழ் மக்கள் என்பது உண்மை.

நீலகிரியைச் சுற்றிலும் இன்று சற்று நாகரிக முடையவர்களாகவும், பண்டைக் கால முதல் எல்லாத் தொழில்களையும் திறமையாகச் செய்யக் கூடியவர் களாகவும், தங்கள் ஊர்களை ஏழு ஊர்களில் வைத்துக் கொண்டு வாழும் நீலகிரிப் பழங்குடி மக்கள் கோத்தர்கள் என்று அழைக்கப்படுகின்றனர்.

கோத்தர்கள் தங்களைத் தங்கள் மொழியில் 'கோவ்' என்றும், 'கோ' என்றும், படக மங்கையர்களை "மைத்" - (பெண்) என்றும், ஆண்களை 'மைவெ' என்றும், தோதுவர்களைத் 'தொான்' என்றும், குறும்பர்களைக் 'கவடெ' என்றும் கூறுகின்றனர். மேற்கண்ட பெயர்ச் சொற்களெல்லாம் தமிழிலிருந்து பிறந்தன வென்றும், 'கோ' என்னும் சொல்லால் தங்களை அரசர் குலத்தவர்கள் என்று சொல்லிக்கொள்வதிலிருந்து இவர்கள் தமிழர்களே என்பதும் விளங்குகின்றது. மேலும் இங்குவாழும் கோத்தர்கள் பண்டைநாளில் அரசர்களாகவோ அல்லது அரசர்களின் அவையில் நெருங்கிய தொடர்பு கொண்டவர்களாகவோ இருந்திருக்கக்கூடும். ஏனென்றால், இன்று இவர்களின் ஊர்களுக்குச் சென்று பார்த்தபோது இவர்கள் வாழும் இல்லங்களின் கதவுகளையும் இவர்களின் தொழில் களையும் கூர்ந்து கவனித்தேன். கல்லையும் மண்ணையும் கொண்டு சுவர்கள் எழுப்பியும், ஓடுகள் வேய்ந்தும் மரங்களை அறுத்து வைத்தும், அழகான சித்திர வேலைப்பாடுகள் அமைத்த கதவுகளை வைத்தும் வீடு கட்டுகின்றனர்.

இரும்புகளைக் கொண்டு எல்லாவித ஆயுதங் களையும், பொருள்களையும் செய்கின்றனர். இவ்வாறு கிராமங்களுக்கு வேண்டிய கட்டடப் பொருள்கள் முதலியவற்றைச் செய்வதால் இவர்களுக்குப் பண்டைக் காலத்தில் அரசர்கள் 'கொத்தர்' என்ற பட்டப் பெயரையும், தொழிற் பெயரையும், கொடுத்தார்கள் போலும். பிறகு இவர்கள் வாழ்ந்த நாட்டு அரசர்கள் நாட்டை இழந்ததால் பகை அரசனுக்கு அஞ்சி மறைந்து

மலையில் வாழும்போது தங்களைக் 'கோத்தர்கள்' என்று மாற்றிக்கொண்டு நாளடைவில் கோத்தர் களானார்களோவென்று யூகிக்கப்படுகின்றது.

கோத்தர்கள் ஒருவித மரத்தில் நார் போன்ற பட்டையிலிருந்து துணி நெய்கின்றனர். அதைப் படகரும்,,கோத்தர்களும் கோடித் துணியாக உடுத்தும் பழக்கம் இன்றும் உண்டு.

கோத்தர்களிடம் கடந்த இருபது ஆண்டுகளாகப் பழகும் எனக்கு இவர்களின் மொழி மற்ற பழங்குடிகளின் மொழிகளுக்குச் சிறிது மாறுபட்ட தாய்க் காண்பினும், பெரிதும் முற்காலத் தமிழ்ச் சொற்களின் அடிப்படையிலிருந்து மருவி வந்த மொழியாகவே தோன்றுகின்றது.

பல்லாண்டுகளாகக் காட்டில் வாழும் பழங்குடி களுடைய மொழிகளை எழுதும் நான், "நம் தமிழ்த் தாய்க்கு நான்கு குழந்தைகள் மட்டுமல்ல, மேலும் பல இருக்கலாம் என்ற தீர்மானத்திற்கு வந்துள்ளேன். ஏனென்றால், பழங்குடிகளின் மொழியை ஆராய்ச்சி களின் அமைப்பிலிருந்து நான்கு மொழிகளுக்கு மட்டுமே கடன் கொடுத்தது" என்று கூறும் கருத்துத் தவறு என்று கூறுகிறேன். ஆரியர் வருவதற்கு முன்னும் பின்னும் இந்தியா முழுவதும் பேசப்பட்டது தமிழ்; இமயம் முதல் குமரி வரையில் தமிழ் மொழியே பரவி இருந்தது என்பதனை 'சதுர்மறை ஆரியம் வருமுன் சக முழுதும் நினதாயின் முதமொழி நீ அநாதியென மொழிகுவதும் வியப்பாமே' என்று மனோன்மணீயம் கூறுகிறது. ஆனால், மக்கள் இடப்பெயர்ச்சி, தொடர்புக் குறைவு போன்ற காரணங்களால் காலப்போக்கில் மொழிகள் பலவிதமாகப் பரவிவிட்டன. ஆனால் இன்று காட்டிலும் மலையிலும் வாழும் மக்களிடம் பல தமிழ்ச் சொற்கள் இருக்கின்றனவென்று கண்டேன். இன்றும் கோத்தர்கள் தந்தையை "அய்னே" என்றும் மகனை "மீனே" அல்லது "மேய்ன்" என்றும் மகளை "மோளள்"

('மோள்'-என்பது மலையாளத்தில் மகள் என்பது) என்றும், மருமகனை 'மோளாளன்' (மோள்+ஆளன்) "மகளை ஆளக் கூடியவன்" எனப் பொருள்படும் சொல்லாகக் கொள்ளல் வேண்டும் என்றும், மருமகளை "மேய்ன் பேட்" (மகனின்பேடு) அல்லது "மகனின் பெண்டு" என்றும் அழைக்கின்றனர். பாட்டியை "பேகுவெ" (பெரிய தாய் எனப்பொருள்படுகிறது.) என்று 'அழைக்கின்றனர். இதைப்போல ஒவ்வோர் ஆதிவாசிகளின் மொழிகளை ஆராய்ச்சி செய்ததில்- காட்டிலும், மலையிலும் மறைந்து வாழும் ஆதிவாசிகளில் நான் கண்ட பழங்குடிகள் முதல் எல்லோரும் தமிழர்களே என்று கூறுவேன்.

அடுத்து, கடுமையான மலை உச்சிகளிலும் காடுகளின் உள்ளேயும், அயலார்களின் கண்ணில் படாமல் இன்று வரை மறைந்து வாழும் ஆதிவாசிகளின் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் "குறும்பர்" எனப்படுவர். இவர்களில் தேன் குறும்பர், வெட்டுக்குறும்பர், பால் குறும்பர், ஊராளிக் குறும்பர் எனப்பல பிரிவுகள் உண்டு. இவர்களில் சிலர் இன்றும் பாறையில் வசிக்கின்றனர். ஆனால் நம்மைக் கண்டால் பாறையைப் போல் உருண்டு ஓடி விடுவார்கள் என்றும், மற்றக் குறும்பப் பிரிவினர்கள் கூறுகின்றனர்.

கொங்கு நாட்டுக் குறுநில மன்னர்கள் ஆண்ட காலத்தில் குறும்பர்களும் தங்கள் ஊர்களை அரசர்களாக இருந்து அரசாண்டார்கள் என்பதற்கும் - அக்காலத்தில் அரசாண்ட பேரரசர் தொண்டைமான் இக்குறும்பர், கண்டர், கடம்பர் கூட்டத்தார்களை வென்று தம் தொண்டை மண்டலத்தை இருபத்து நான்கு கோட்டங்களாகப் பிரித்து அரசாண்டார் என்பதற்கும் பல ப்ட்டையங்களும், வரலாறுகளும் இன்றும் உள. குறும்பர்கள் நடனப் பாட்டுப் பாடும்போது அவற்றில் சில பாடல்களைக் கவனித்த நான், அவற்றில் சில பாடல்களைத் திருத்தி அமைத்து ஒன்று சேர்த்த பின், சில பாடல்கள் கலிங்கத்துப்

பரணியில் 520-522 - ஆம் பாடல்கள் என்பதைக் கண்டதும் பெரு வியப்படைந்தேன். இப்பாடலால் குறும்பர்கள் பண்டைக் காலத்தில் ஆட்சியாளராக இருந்தார்கள் என்பது உறுதியாகிறது. மலைச் சரிவுகளில் உள்ள நிலங்களின் உரிமைகள் இன்றும் மலைவாழ் மக்களுடையவை என்றும், குறும்பர் களுடையவை என்றும் கூறுகிறார்கள். இன்னும் இந்த ஆதிவாசிகள் தங்கள் நிலங்களுக்கு எந்த வரியும்அரசாங்கத்திற்குச் செலுத்துவதில்லை. மேலும் தொண்டை மண்டலத்தில் 'குறும்பர் நாடு' இருப்பதாலும், ஆரணியில் (வ.ஆ.) குறும்பர்களின் கோட்டைகள் இருந்த இடம் 'மண் மேடாக' இருப்பதாலும், சென்னை வடதிருமுல்லை வாயிலில் 'தொண்டைமான் குறும்பர்கள் போரில் தோல்வி அடைந்தான்; பிறகு நந்தியால் வெல்லப் பட்டான்' என்று ஆதாரங்கள் இன்னும் இருப்பதாலும், இவர்கள் பல்லவர்களுக்கு முற்பட்ட தமிழகத்தின் அரசர்களே என்பது உறுதியாகிறது. "இங்கு, அங்கு, எங்கு" என்பவைகளுக்கு "இல்லி, அல்லி, எல்லி" என்னும் கன்னடச் சொற்கள் இருந்தும் குறும்பர்கள் உபயோகிக்கும் 'இத், அத், எத்' என்னும் சொற்கள் படகர் மொழியில் மிகுதியாய் வருவதால் தோதுவ மொழியிலுள்ள திரிபு போல், 'இஃது, அஃது, எஃது' என்னும் தமிழில் பிறந்த மொழி பேசும் குறும்பரின் மொழிதான் படகர் மொழியோடு கலந்துவிட்டதோ என ஐயம் ஏற்படுகிறது.

இவர்களின் மொழிகளும் திராவிட மொழிகளும் வேறுபட்ட மொழிகளாய்க் காணப்பட்டாலும், இவர்களுடைய மொழிகள் எல்லாம் தமிழின் திரிபு கலந்த அடிப்படை மொழிகளே என்று கூறலாம். இந்தக் கொங்கு நாட்டு ஆதிவாசிகளில் 'இருளர்' ஒருவர்.

இவர்கள் தூங்கு என்பதை 'றொங்கு' என்றும், உரல், உலக்கை என்பவைகளை 'ரல்' - 'லக்கேத்தண்டு' என்றும், கூப்பிடு என்பதை 'லே' என்றும், இறங்கு என்பதை 'ருங்கு' என்றும் வழங்குவதைப் பார்த்தால் அவை அகரம், இகரம்,

உகரம் குறைந்த தமிழ்ச் சொற்களென தெளிவாய்த் தெரிகின்றது. 'அழைத்து வா' என்னும் சொல், அகரம் கெட்டு 'ழைத்துவா' என்றாகி 'ழை' லையாகவும் பின் 'லே' யாகவும் திரிந்து இன்று 'லேத்துவா' என்று அவர்களால் ஒலிக்கப்படுகின்றது. "உறங்கு" றொங்காகவும் "இறங்கு" றங்காகவும் மாறலாம். கூப்பிடு, தூங்கு என்னும் சொற்களைக் காட்டிலும் அழை, உறங்கு என்பன பண்பட்ட தமிழின் அடிப்படையில் வந்த சொற்கள் என்பது புலனாகின்றது.

இருள மங்கையர்களைப் பார்த்து, "இதாவே பெண்ரீ" என்பதை அம்மா பெண்டிர் எனக்கொள்ளல் வேண்டும். தகப்பனுக்கு 'அம்மான்' என்பதன் அடிப்படையில் பிறந்து, 'அம்மா' வென்றும், அண்ணனுக்குத் தமையன் என்பதிலிருந்து வந்த ஐயா வென்றும், அக்காளுக்குத் தமக்கை என்பதிலிருந்து வந்த 'அக்கேச்சி' என்றும் பயன்படும் சொற்கள், இருளர் மொழியில் உள்ளன. இவர்களின் மொழியை ஒத்திருக்கும் மற்ற மொழி பேசும் ஆதிவாசிகளும், மலைவாசிகளும் இக்கொங்கு நாட்டின் பழந்தமிழ் மக்கள் என்பதற்கு யாதொரு ஐயமுமில்லை. மேலும் இருளரின் ஊர்களில் ஐந்து பேர் பட்டம் பெற்ற ஊர் ஆட்சியாளர்கள் இருப்பார்கள். இவர்களின் மூலம் கிராம ஆட்சி செய்யும் வழக்கம் இராஜராஜ சோழன் காலத்துப் பட்டையங்களில் காணப்படும்.

ஒரு அரசன் வேறு நாடுகளின் மீது படை எடுக்கவோ, அல்லது பயணம் செய்யவோ நேர்ந்தால் பண்டைக் காலத்தில் முன்கூட்டியே பல ஒற்றர்களை அனுப்பி வழியும், மற்ற செய்திகளும், வசதிகளும் செய்ய அனுப்புவதுண்டு. அல்லது தன் நாட்டில் மற்ற அரசர்களுக்கு அவரவர்களின் மூலம் செய்தி தெரியட்டும் என்று தன் நாட்டிலேயே பறையடிப்பதுண்டு. அதைப்போல சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குச் சிலை எடுக்க இமயம் செல்லுங்கால் நீலகிரி மலையில் தன் படையுடன் 'பாடி' வீட்டில் தங்கினான் என்றும், செல்வதற்கு முன் பறைசாற்றவே அது ஒற்றர் வழி பரவிய

*செய்தியும் சிலப்பதிகாரக் காட்சிக் காதையில் படம் பிடித்துக் காட்டப்படுகிறது. அப்பாடலைக் கீழே காண்க:*

“விற்றலைக் கொண்ட
வியன்பே ரிமயத்தோர்
கற்கொண்டு பெயருமெங்
காவல னாதலின்
வடதிசை மருங்கின்
மன்ன ரெல்லாம்
இடுதிறை கொடுவந்
தெதிரீ ராயின்
கற்கடம் பெறிந்த
கடும்போர் வார்த்தையும்
விடர்ச்சிலை பொறித்த
வியன்பெரு வார்த்தையும்
கேட்டு வாழுமின்
கேளீ ராயின்
தோட்டுணை துறக்குந்
துறவொடு வாழுமின்
தாழ்கழன் மன்னன்
தன்றிரு மேனி
வாழ்க சேனாமுகம்.”

**(சிலப். காட்சிக் காதை : 183 – 192)**

*சேரன் செங்குட்டுவன் அங்ஙனம் சென்று, வடநாட்டில் கனக விசயருடன் போர் தொடுத்த போது இந்த மலைவாழ் பழங்குடிகளில் சிலர் அவனுடன் வந்த குறவர்களும், மறவர்களுமாக இருக்கலாமோ எனக்கருதவும் இடம் உண்டு. ஏனென்றால், வயநாடு, சேரம்பாடி, ஆனைமலை, நீலகிரி முதலிய இடங்களில்*

வாழும் பழங்குடிகள் அனைவரும் தாங்கள் வாழுமிடங்களைப் "பாடி" என்று அழைக்கின்றனா. இந்தப் பல காரணங்களைக் கொண்டும் கொங்கு நாட்டில் வாழும் ஆதி மக்கள் அனைவரும் தமிழர்களே என்பதுறுதி.

மேலும் குறும்பரின் ஓர் ஊருக்குப் பெயர் "நடுகல் கொம்பை" என்பது. பக்கச் சுவர்கள் இல்லாது நடுக்கொம்பைக் கொண்டு குடிசை கட்டுகிறார்கள். முற்காலத்தில் தமிழ் வீரர்களும், வேந்தர்களும் தங்கள் வெற்றிக்கும் வெற்றி வீரர்களுக்கும் நினைவுச் சின்னமாக நடும் கல்லுக்கு "நடுகல்" என்பதால், அந்த வீரர்கள் வாழும் பாடியின் குடிசைகள் தொகுதிக்கு "நடுகல் கொம்பை" என்று பெயர் ஏற்பட்டிருக்கலாம். அல்லது சேரன் செங்குட்டுவனால் நடப்பட்ட கல்லின் ஊர் எனவும் கொள்ளலாம். ஏனென்றால் "ஞலேன்ஸ்" என்னும் நீலகிரியின் தென்கோடியிலுள்ள காப்பித் தோட்டத்தின் அருகில் "வீரகல்" என்னும் ஓர் குறும்பர், இருளர் ஊரும் அதன் அருகில் "எழுத்துக்கல்" என்ற பழமையான எழுத்துக்களால் பொறிக்கப்பட்ட ஓர் பாறையின் சின்னமும் இன்று கீழ்முள்ளிக்கருகில் முள்ளியாற்றின் கரையில் உள்ளது. "சுல்தானா" என்னும் காப்பித்தோட்டத்தை அடுத்துள்ள ஒரு மலைக்குச் "செங்கோட்டைராயன் மலை" என்று பெயர் உள்ளது. "செங்குட்டுவராயன்மலை" என்பது செங்கோட்டை ராயன் மலை எனத்திரிந்து இருக்கலாமன்றோ?

மேலும் சங்க கால நூல்களிலுள்ள சில இடங்களின் பெயர்கள் இங்கும் இருக்கின்றன. "கொல்லிமலை" என்று கோத்தர்களின் ஊராக ஒன்று இன்றும் இருக்கிறது. இங்குள்ள ஒரு காப்பித் தோட்டத்தைக் "கோட்டைக்கல் தோட்டம்" என்பர். அந்த இடத்தில் சேரனால் கட்டப்பட்ட ஒரு கற்கோட்டையிலிருந்து "கோட்டைக்கல்" என்று மருவி இருக்கலாம். ஏனென்றால் அங்கு இன்றும் கோட்டையின் சிதைவுகள் ஆங்காங்கே காணப்படுகின்றன.

கோத்தர்களின் ஊராகிய கோகாலில் பல நாட்கள் தங்கியபோது சுற்றிப்பார்க்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அப்போது அங்குள்ள 'சேரம்பாடி' என்னும் ஊர் "சேரன்பாடி" அல்லது "சேரன் படை வீடு" என்னும் சொல்லிலிருந்து மருவி வந்தது போலும்.

இதுபோன்ற சம்பந்தப்பட்ட மலைவாழ் மக்களின் ஊர்களைப் பற்றியும், மொழிகளிலுள்ள சொற்களைக் குறித்தும் சுமார் ஐந்நூறு சொற்களை ஆராய்ந்துள்ளேன்.

இவ்வாறு வரலாற்று ஆதாரங்கள் சங்க கால நூல்களையும் பல மலைவாழ் மக்களின் மொழிகளையும் சில கல்வெட்டுகளையும் கிறிஸ்துவ வேத நூல் ஆகியவற்றையும் செய்த பல்லாண்டுகளின் ஆராய்ச்சியின் முடிவையே இக்கட்டுரையில் எழுதியுள்ளேன்.

இக்கருத்துக்களைக் கொண்டு பார்த்தால் இக்கொங்கு நாட்டு மலைகளில் வாழும் பழங்குடி மக்கள் அனைவரும் பகை அரசனுக்கு அஞ்சி பல்லாண்டுகளுக்கு முன் இம்மலையில் குடியேறிய தமிழ் மக்களே என்பதை உணரலாம். தொன்றுதொட்டு இம்மலை தமிழர்களின் தாயகமாய் இருந்திருக்கிறது என்று பல நூல்கள் கூறுகின்றன.

தொ. ப.

# காட்டில் வாழும் நீதி முறைகள்

நீதி, நேர்மை, கட்டுப்பாடு, கண்ணியம் ஆகிய உயர்ந்த குணங்களைத் தம் வழித்தோன்றல்களுக்குப் போதிப்பதே நம் மூதாதையர்களின் குறிக்கோளாக இருந்திருக்கிறது. அக்காலத்துப் பெரியோர்களும், புலவர்களும் நமக்கு விட்டுவைத்துச் சென்றுள்ள குறையாத செல்வங்களாக நம்மிடையே இருப்பவை நீதி நூல்களாகும். அகர முதல் எழுத்தை அரிச்சுவடி வகுப்பில் தொடங்கும் குழந்தைக்கு ஔவைப் பிராட்டியின் மூதுரைகளைத் தாம் நாம் முதலில் போதிக்கிறோம். நாகரிகம் மிகுந்த நாட்டு மக்கள் பண்போடு வாழ்வதற்கு எத்தனையோ பழமொழிகளும் நீதி நூல்களும் இருக்கின்றன. ஆனால் காடுகளிலும் மலைகளிலும் வாழும் நாகரிகமற்ற ஆதிவாசிகளோ பட்டணத்தானைவிடப் பண்போடு வாழ்கிறார்கள். நேர்மையோடு நடக்கிறார்கள். ஆதி பரம் பொருளையும் நீதியையும் நம்புகிறார்கள். ஔவையாரையோ வள்ளுவரையோ பற்றி அறியாத காட்டுவாசிகள் அப்பெரியார்கள் வகுத்துச் சென்ற வழியில் வாழும் விந்தையை என்னவென்று சொல்வது! ஆத்திசூடியும், கொன்றைவேந்தனும், மூதுரையும், நல்வழியும், வெற்றிவேற்கையும், உலக நீதியும், வாக்குண்டானும், திருக்குறளும் எவற்றையெல்லாம் போதிக்கின்றனவோ அதன்படியெல்லாம் இக்காடர்கள் வாழ்ந்து வருகிறார்கள் என்றால் வியப்பாக இருக்கிறது அன்றோ? ஆனால், இது உண்மை. எல்லா நீதி நூல்களையும் தனித்தனியாக அவர்களின் வாழ்க்கையுடன் பொருத்தி எழுதலாம். இருப்பினும் நமது ஔவையாரை மட்டும் அழைத்துக்கொண்டு காட்டுக்குள்ளே நடப்போம்.

பல ஆண்டுகளாகத் தமிழ்நாட்டு ஆதிவாசிகளின் வாழ்க்கை முறைகளை ஆராய்ந்து வரும் நான், ஔவை

அருளிய கொன்றை வேந்தனில் கூறியுள்ள நெறிமுறைகளை அவர்கள் கடைப்பிடித்து வருவதைக்கண்டு வியப்புற்றேன். அந்த வியப்பு மேலும் என்னை ஆராய்ச்சி செய்யத்தூண்டியது. அப்படிச் சேகரித்த சில குறிப்புகளைத் தான் இங்கே தொகுத்து அளித்திருக் கிறேன்.

காட்டுவாசிகள் தங்களிடையே ஏற்படும் பிணக்குகளைத் தீர்த்துக் கொள்வதற்கு நாகரிக மக்களைப் போல், நீதிமன்றங்களுக்கும் போவதில்லை வழக்குரைஞர் வைத்து வாதாடுவதுமில்லை. தங்களிடையே உள்ள பெரியவர்களைத் தேர்ந்தெடுத்து, பஞ்சாயத்து வட்டம் கூடி உட்கார்ந்து விவகாரங்களை அவர்களின் மூலம் தீர்த்துக் கொள்ளுகிறார்கள். இம்மாதிரியான பஞ்சாயத்து வட்டங்களில் நானும் சில நேரம் கலந்து கொண்டதுண்டு.

அப்படிக் கலந்துகொண்டு அதைக் கவனித்த பொழுது, "இந்தக் காடர்கள் பண்டைக் காலத்தில் நாட்டையாண்ட ஏதோ ஒரு குறுநில மன்னர் மரபினராகவோ, நல்ல புலமை வாய்ந்தவர்களின் குடும்பத்தில் பிறந்தவர்களாகவோ, அல்லது நல்ல நாட்டு மருத்துவர்களின் வழிமரபினராகவோ இருந்திருக்க வேண்டும்" என்று நான் அடிக்கடி சிந்திப்பதுண்டு. அவர்களிடம் அவ்வப்போது கிடைத்த சில செய்திகளைச் சேர்த்துப் பலரிடம் அவற்றைப் பற்றி யோசனை கேட்ட போது பலர் பலவிதமான கருத்துக்களைக் கூறினார்கள். அப்படி ஒருமுறை பஞ்சாயத்து வட்டத்தில் நான் அமர்ந்திருந்தேன். அன்றைய வழக்கு ஒரு மங்கை தன் கணவனை மண விலக்கு செய்வது பற்றியதாயிருந்தது.

காட்டில் வாழும் மங்கையர்கள் கணவனை மண விலக்கு செய்வது மிகச் சாதாரணமானது தான். என் முன் அன்று நின்றிருந்த அப்பெண், "எனக்கு அவரைப் பிடிக்கவில்லை" என்றுதான் கூறினாளே ஒழிய, காரணத்தைக் கூற மறுத்துவிட்டாள். 'அவனும்

இளைஞன், நல்ல அழகுடன் இருக்கிறான். இவளும் இளம் பெண், நல்ல கட்டுக்கோப்பான உடல், அழகுடனுமிருக்கிறாள். இப்படி இருக்க இவர்கள் ஏன் ஒருவரை ஒருவர் மண விலக்கு செய்கின்றனர்?' என்ற சிந்தனையில் நான், "சரி, நாளைக்கு இவர்களுக்கு நானே தீர்ப்புக் கூறுகிறேன்" என்று கூறி அன்றைக்குப் பஞ்சாயத்தை முடித்துவிட்டேன். பஞ்சாயத்துக் கூடிய நேரம் மாலை சுமார் ஆறு மணி இருக்கும். பஞ்சாயத்தை வேண்டாம் என்று நான் கூறிய நேரம் சுமார் இரவு எட்டு மணி இருக்கும் மறுநாள் ஞாயிற்றுக்கிழமை. மலை மக்கள் எல்லாரும் சந்தைக்குப் போய் மாலை சுமார் ஐந்து மணிக்கெல்லாம் வந்த பின்தான், பஞ்சாயத்துக் கூடும் என்ற முடிவுடன் இருந்தேன். அன்று இரவு எனக்குத் தூக்கம் வரவில்லை. மறுநாள் நான் என்ன தீர்ப்பு செய்ய முடியும்? என்னையே அன்று மூப்பனாக-முதல்வனாக இருக்க வேண்டும் என்று கூறிவிட்டார்கள்.

பொழுது விடிந்தது. எல்லாரும் சந்தைக்குப் போய் விட்டார்கள். ஆண்கள் யாரும் இல்லை. சில கிழவிகளும் சிறுமிகளுமே இருந்தார்கள். கண் தெரிந்த ஒரு கிழவியிடம் மெல்லப் பேச்சுக்கொடுக்கத் தொடங்கினேன். பேசிக்கொண்டே இருந்த அந்தக் கிழவி, "இன்று உங்களிடம்தான் பஞ்சாயத்தாமே?" என்று கேட்டாள். அதுதான் நேரமென்று- "பாட்டி, என்ன செய்வது? எனக்கு என்னவோ அவர்கள் மகிழ்ச்சியாக வாழ்வதைக் காண வேண்டும் என்று இருக்கிறது" என்றேன். "என்னவோ அவளுக்குப் பிடிக்கவில்லையாம்" என்று கூறினாள் பாட்டி. "ஆமாம் பாட்டி! பிடிக்காத காரணத்தைக் கூறினால், நானாவது ஒரு வழியைக் கண்டுபிடிப்பேன் இல்லையா? அவளுக்கு யார் மேலாவது. . . ?" என்று நிறுத்தினேன்.

"அப்படி இருந்தால், அதைக் கூறிவிட்டு அவளை மறுமணம் செய்து கொள்ளும் புதிய ஆளிடம், முதல் திருமணத்தின் செலவை வாங்கிக் கொடுத்து விடுவாளே! அது அவ்வளவு கடினமில்லை. அப்படி அவளுக்கு யாருமில்லை!" என்று கூறினாள் பாட்டி.

"அப்படி இல்லை என்றால் வேறு என்ன காரணம் இருந்தாலும், அதைப் பஞ்சாயத்தின் முன்னிலையில் கூறலாம் இல்லையா?" என்று கேட்டேன்.

"எங்கள் மலை நாட்டில் கணவனை மனைவிக்குப் பிடிக்கவில்லை என்றால், எப்பெண்ணும் பஞ்சாயத்தில், தன் கணவனைக் கேவலமாகப் பேசமாட்டாள். மரியாதையாகப் பிடிக்கவில்லை என்று கூறுவார்களே ஒழிய, மற்ற அவதூறான சொற்களையோ, "போடா! பெண்களை வைத்துப் படைக்கத் தெரியாதவனே!" என்றோ கூற மாட்டார்கள்.

"முதலில் ஒருவரை ஒருவர் உடல் அழகைக்கண்டு திருமணம் செய்து கொண்டார்கள். பிறகு அவனுடைய உடலிலோஅல்லது அவளுடைய உடலிலோ ஏதாவது குறைகள் இருக்கும். ஆகையால், "எனக்குப் பிடிக்க வில்லை!" என்று கூறினாள். பிடிக்காததற்குக் கணவனிடம் பல குறைகள் இருந்தாலும், அதைப் பஞ்சாயத்தில் கூறினால், அது கணவனை அவமானப்படுத்துவதாகும்அன்றோ?

"அங்ஙனம் ஒரு பெண் பஞ்சாயத்தில் தன் கணவனை அவதூறாகப் பேசினால், அவளை மற்ற பெண்களையும் அவளிடம் மிகுதியாக நெருங்கிப் பழகாமல் அவர்களின் தாய்மார்கள் கவனித்துக்கொள்வார்கள்" என்று கூறினாள் பாட்டி.

'கணவனைக் குறைவாகப் பேசக்கூடாது' என்ற கொள்கையை, எல்லாக் காடுகளிலும், மலைகளிலும் கடைப்பிடிப்பதைக் கண்டேன். மேலும், மண விலக்கு செய்த கணவனிடம், பிறகு சகோதர வாஞ்சையில் சகஜமாகப் பேசுகிறார்கள். அங்ஙனம் பேசும்பொழுது, தன் முதல் கணவனிடம் அல்லது தன் முதல் மனைவியிடம் இருந்த குறைகளை மற்றவர்களுக்குத் தெரியாமல், "எனக்கு இதைச் சொல்ல உரிமை உண்டு!" என்று கூறிக்கொண்டே கூறுவார்கள். இக்கருத்தை நம்முடைய ஔவையார் கொன்றைவேந்தனில், "தூற்றும்

பெண்டிர் கூற்றெனத்தகும்” என்கிறார். தன்னுடைய கணவன்மேல் குற்றத்தைச் சுமத்தித் தூற்றுகிற பெண்கள் கணவனுக்கு எமனாக வந்தவர்களே என்பது கருத்து, இக்கருத்தை மனத்தில் வைத்துக்கொண்டு, அன்று மாலை எல்லோரும் சந்தையிலிருந்து வந்த பின், இவற்றை அவர்களுக்கு விளக்கி, மற்றவர்கள் எப்படி முடிவு செய்தார்களோ, அப்படியே நானும் ஆமாம் பாட்டுப் போட்டுவிட்டு அன்று பஞ்சாயத்தை முடித்தேன். காடுகளில் ஒருத்தி, இரண்டு மூன்று மண விலக்கு செய்தால், அவளுக்கு அறிவுரை கூற பெண்கள் பஞ்சாயத்துக் கூடிப்பேசுவார்கள். அந்தப் பஞ்சயத்து, ஆண்களுக்குத் தெரிந்தும், தெரியாமலும் நடைபெறும். அங்ஙனம் பகல் உணவுக்குப் பின் நீண்ட நேரம் பெண்கள் பேசிய பின் அவளுடைய குறைகளையும், அவள் ஆண்களைத் தேர்ந்தெடுக்கச் சக்தி இல்லாதவள் என்பதையும் அறிந்து நற்குணமுள்ள வனாகவும், எந்தக் குறையுமில்லாதவனாகவும் ஒருவனைத் துணையாகத் தேர்ந்து திருமணம் செய்வித்து ஒரே பாடியில் ஒரே வீட்டில் வாழச் செய்து விடுவார்கள்.

இதில் ஒரு சிறப்புள்ளது. இங்ஙனம் பெண்களுடைய பஞ்சாயத்தில் கட்டுப்பட்ட அவள், அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட கணவனைக் கடைசி வரையில் கைவிடுவதில்லை. அவனும் அவளைக் கைவிடுவதில்லை. அதற்குக் காரணம் என்ன என்று ஆராய்ச்சி செய்தபொழுது சில காடுகளில் எனக்குச் சில செய்திகள் கிடைத்தன.

பெண்கள் பஞ்சாயத்தின் முடிவுப்படி திருமணம் செய்தவனை மற்ற பெண்கள் திருமணம் செய்து கொள்ளமாட்டார்கள். அந்தப் பெண்ணையும் மற்ற ஆண்கள் தங்களுக்கு வைப்பாட்டியாக இருக்கவும் விருப்பப்பட மாட்டார்கள். பெண்கள் கூடித் தீர்மானித்த ஒன்றை உலகில் எவர்தான் மீறி அமைதியாய் வாழ்ந்திட முடியும்? மலை மக்களின் இந்த உயர்ந்த அறிவைக் கண்ட நான், “ஒருவனைப் பற்றி ஓரகத்து இரு” என்று ஔவை கூறியதை நினைத்துக் கொண்டேன்.

சில நேரங்களில் மலைவாசிகளுக்குள் மனக்கசப்பு ஏற்படும்போது, இவர்கள் கூறும் சமாதானத்தைக் கேட்டு எனக்கே வியப்பாக இருந்ததுண்டு.

'சரிதான் போப்பா! என்னவோ தெரியாமல் அதைச் செய்துவிட்டான். அவன்தான், தெரியாமல் செய்து விட்டேன் என்று கூறுவதற்கு அறிவுடைமையால் தயங்குகிறான். அப்போது நாம் என்ன செய்ய வேண்டும்? நாம் அறிவாளியாகக் கண்டுகொள்ளாமல் இருக்க வேண்டும். எல்லாவற்றுக்கும் குற்றம் பார்த்துக் கொண்டே இருந்தால் எப்படி? நம்முடைய பாடியில்தான் ஆண்களைக் குலதெய்வம் குறைத்து விடுவாள். ஆண்கள் நம்முடைய பாடியில் குறைந்தால், அது உனக்கும் ஏற்படும் இழப்பு இல்லையா?' என்று அவன் குருதியில் உறைக்கும்படி சாந்தமாகக் கூறுவார்கள். உறவினர்களுடைய குற்றத்தைக் காட்டில் மன்னிப்பதைப் போல், நான் நாட்டில் கண்டதே இல்லை. இவ்வாறு 'குற்றம் பார்க்கின் சுற்றம் இல்லை' என்று ஔவை கூறியதை அவர்கள் கடைப்பிடிக்கின்றனர்.

மற்றொரு மிகப் போற்றற்குரிய பண்பு : சில மலைகளில் சண்டை வருவதும் உண்டு. அந்தச் சண்டையில்கூட நியாயமாகப் பேசிக்கொள்வார்களே அன்றி, தன் கட்டுப்பாடின்றி, நகரங்களிலும், பட்டணங்களிலும் உள்ள சிலர் பேசுவதைப் போல், 'கத்தியால் குத்தி விடுவேன்! பல்லை உடைத்து விடுவேன்' என்றெல்லாம் பேசிக்கொள்ள மாட்டார்கள். அடித்துக்கொள்வதையும் நான் கண்டதே இல்லை. மேலும், காடர்களின் ஒவ்வொரு குடிசைகளிலும் ஈட்டிகளும், அம்புகளும், துப்பாக்கிகளும், கத்திகளும் உண்டு. முறையோடு பேசிச் சண்டை போட்டுக் கொள்வார்களே ஒழிய ஆயுதங்களாலும், கையாலும் சண்டை போடவே மாட்டார்கள். இக்கருத்தை ஔவையார், "கூரம் பாயினும் வீரியம் பேசேல்' - கையில் கூர்மையான கருவியை வைத்திருந்தாலும் வீரியம் பேசாதே என்று விளக்குகிறார். அப்படி ஒருவரை ஒருவர்

அடித்துக் கொண்டால், முதலில் அடித்தவனுடைய குலதெய்வத்திடம், அடிபட்டவனுடைய குலதெய்வம் வந்து முறையிடுமாம். அப்படி முறையிட்டதும், அடித்தவனுடைய குலதெய்வம் அவனை விட்டு நீங்கிவிடுமாம். அங்ஙனம் அவனை விட்டுக் குலதெய்வம் நீங்கியதும் அவன் காட்டில் போகும்பொழுது, மற்ற கொடிய விலங்குகளால் இடர் உடனே ஏற்படும் என்றும், காலையில் சண்டையிட்டால், மாலைக்குள் அவனுக்கு ஏதாவது ஒரு தண்டனையைக் காட்டில் குலதெய்வம் கொடுத்து விடுவாள் என்றும் நம்புகின்ற காடர்களிடம் சண்டைகளை எப்படி மிகுதியாகக் காண முடியும்?

ஆனால், பண்டைக்காலத்தில் ஔவை கூறியதை அவர்களால் புரிந்து விளக்க முடியாவிட்டாலும், அதைக் கடைப்பிடிக்கின்றனர். ஆகையால், 'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்' என்பதை அவர்களுக்கு எடுத்துக் கூறினேன். பிறருக்குத் தீங்கு செய்தால் உடனே தனக்குக் குலதெய்வத்தால் தீங்கு உண்டாகும் என்பதை நம்புவதால், காட்டில் சமாதானம் நிலவுகிறது.

சிலர் கிராமங்களையும், பேருந்து ஓடும் சாலையையும் விட்டு விலகி, ஏறக்குறைய இருபது - முப்பது மைல்கள் தள்ளி அடர்ந்த காடுகளின் உள்ளே வாழ்கின்றனர். அந்தக் காடுகளில் சாதாரணமாய் நிலவுக் காலங்களில் பயணம் செய்ய முடியாது. ஏனென்றால் அந்தக் காலத்தில் யானைகளின் நடமாட்டம் மிகுதியாக இருக்கும். அந்த இடங்களில் வாழும் காடர்கள் இன்பமாகவும், உடல் கட்டுடனும், நோயின்றியும் வாழ்வதைக் கண்டு நான், 'உங்களுக்கு ஏதாவது வேண்டியதாக இருந்தால், என்ன செய்வீர்கள்? இவ்வளவு தொலைவு ஒரே நாளில் நடந்துபோய் வர முடியாதே' என்று கேட்டேன்.

"எங்களுக்கு தேவையான உணவுப் பொருள்களை 'நாங்களே பயிர் செய்து' கொள்கிறோம். உப்பு, எண்ணெய் இந்த இரண்டு பொருள்களுக்குத்தான்

நாங்கள் வெளியில் போகவேண்டும். அவற்றை நாங்கள் மாதம் ஒருமுறை வாங்கி வைத்துக்கொண்டால் போதுமே. முக்கியமாக எங்களிடம் மாடுகளும், பயிர்த் தொழிலுக்கு வேண்டிய பொருள்களும் இருக்கின்றன. எங்களுக்கு எண்ணெய் இல்லாவிட்டாலும், எருமையின் வெண்ணெய் இருக்கிறது. ஆகையால் எங்களுக்குக் கவலையே கிடையாது!" என்று கூறுகிறார்கள்.

இவர்களின் துணிச்சலான பேச்சுகளைக் கொண்டு, ஆராய்ச்சி செய்தால், கொன்றைவேந்தனில், 'சீரைத் தேடின் ஏரைத் தேடு' என்ற முன்னோரின் முதுமொழியை இவர்கள் கடைப்பிடிக்கின்றனர் என்பது தெளிவாய் விளங்குகிறதன்றோ!

காடுகளில் வாழும் மக்களுக்குக் கூடுதலான வயதான போதிலும் கண் நன்றாகத் தெரிகிறது. அவர்கள் தொலைவில் இருக்கும் பொருள்களையும் கூர்ந்து பார்க்கும் ஆற்றல் உடையவர்கள். தள்ளாத கிழவனுக்கும் கண் பார்வையைப் பற்றிக் கவலை இல்லை. இதற்குக் காரணம் என்ன என்று கருதும் பொழுது திரு.வி.க. அவர்கள், 'இரவில் நெடு நேரம் கண் விழித்துப் படிக்காதீர்கள். எழுதாதீர்கள். கீரை வகையை நிறையச் சேர்த்துக் கொள்ளுங்கள். நெல்லிக்காயை மிகுதியாகப் பயன்படுத்துங்கள். மிகுதியாகப் பேசாதீர்கள்' என்று கூறியுள்ளதைப் போல, இவர்கள் நடக்கிறார்கள். காட்டில் வாழும் மக்களும், இரவில் தங்களுடைய வயல்களைக் காட்டுப் பன்றிகளிடமிருந்து காவல் காப்பதுண்டு. அவ்வாறு காவல் காக்கக் குறைந்தது இருவராவது போவதுண்டு. அப்படிப் போகும்போது, ஒருவர் முதலிலும், மற்றொருவர் பிறகும் தூங்குவார்கள். இதைக்காண நான் ஒரு காட்டில் அவர்களுடன் உட்கார்ந்திருந்தபோது, என்னைக் கட்டாயப்படுத்திச் சிறிது நேரமாவது தூங்கும்படி செய்தார்கள். நானும் அந்த நேரத்தில் உரக்கப் பேசக்கூடாது என்று படுத்துக் கொண்டேன். ஏனென்றால் எங்களுடைய பேச்சுக் குரல் கேட்டு அங்கு வரும் காட்டுப் பன்றியும் ஓடிவிடும்.

மறுநாள் காலையில் அவர்களிடம் 'நான் இரவு முழுவதும் விழித்திருப்பதுண்டு' என்று கூறினேன்.

"இரவில் காவல் காத்தாலும், வேட்டைக்குச் சென்றாலும் நாங்கள் கட்டாயம் ஒரு தூக்கமாவது தூங்காமலிருக்க மாட்டோம். ஓர் இரவுத் தூக்கத்தை நாங்கள் இழந்து விட்டால், எங்களுடைய குலதெய்வம் ஒரு நாள் முன்னாலேயே எங்களுடைய வாழ்நாளில் தூங்க வைத்து விடுவாள். அதாவது சாவு ஒருநாள் முன் கூட்டியே வரும். மேலும், அடிக்கடி இரவில் தூங்காதவனுடைய மூளையும் சரியாக வேலை செய்யாது.வயதான பிறகு அவன் பித்தனாகவும் மாறக்கூடும். வயதையும் குறைத்து விடுவாள் எங்கள் குலதெய்வம்" என்று கூறுகிறார்கள். பாவம்! தூக்கமின்மையைப் பற்றி அறிவியல் மூலமாகவும், மருத்துவ முறையிலும் கூறத்தெரியாத அப்பாவிகள், குலதெய்வம் என்று கூறுகிறார்கள். இதை விளக்கச், 'சேமம் புகினும் சாமத் துறங்கு' என்று நமக்குக் கொன்றை வேந்தன் எடுத்துக்காட்டுகிறது. அதாவது 'கண் விழித்துக் காவல் காத்தாலும் ஒரு சாம நேரமாயினும் தூங்கவேண்டும்' என்பதாம். இதனால்தான், நகரங்களில் வாழும் சில இளைஞர்கள், அடிக்கடி இரவில் திரைப்படம் பார்த்துப் பார்த்துச் சிறுவயதிலேயே கண்ணாடி அணிந்து கொள்ளுகின்றனர். மேலும், காட்டில் வாழும் மக்களிடையே சோம்பேறிகளைக் காண முடியாது. காலையில் சேவல் கூவுவதற்கு முன் எழுந்து, காலை வேலைகளை எல்லாம் செய்து முடித்து விடுவார்கள். பால் குறும்பர்களிடம் இரண்டு நாட்கள் தங்கியபோது, நான் நன்கு தூங்கிய நேரத்தில் நடமாடும் ஓசை கேட்டது. உடனே எழுந்து வெளியில் பார்த்தேன். எல்லாருடைய குடிசைகளிலும், விளக்கின் ஒளி தெரிந்தது. உடனே நான் கைக்கடிகாரத்தைப் பார்த்தேன். அப்பொழுது காலை மூன்றரை மணி என்று தெரிந்தது. சேவல் கூவும் பொழுதே காலை உணவுகளை எடுத்துக் கொண்டு,

வயல் வேலைகளுக்கும் வேட்டைக்கும் செல்வதைக் கண்டு வியப்புற்றேன். இவ்வளவு காலையில் எழுந்து வேலை செய்வதைப் பார்த்து வியந்து நான் பேசிக் கொண்டிருப்பதைக் கேட்டு, 'எங்கள் பாடியில் சோம்பேறியாக யாரையும் நீங்கள் காண முடியாது. ஒவ்வொருவரும் வேலை செய்ய வேண்டும். தங்கள் குழந்தைகளையும் சிறுவயது முதற்கொண்டு உடன் அழைத்துச் சென்று, எல்லா வித்தைகளையும் பழக்கிவிடுவார்கள். சோம்பேறியாக இருப்பவனுடைய குடும்பம் என்றும் கஷ்டப்படும். சோம்பேறி என்று தெரிந்தவனை, எங்கள் பாடியில் எந்தப் பெண்ணும் திருமணம் செய்துகொள்ள மாட்டாள்" என்று விளக்கினார் ஒரு பெரியவர். இதைத்தான், 'சோம்பர் என்பவர் தேம்பித் திரிவர்' என்று கொன்றை வேந்தன் கூறுகிறது. இதனையே "குடியென்னும் குன்றா விளக்கம் மடியென்னும் மாசூர மாய்ந்து கெடும்" என்று வள்ளுவர் எச்சரித்துள்ளார்.

சாதாரணமாய் எல்லாக் காடுகளிலும், பெரியவர்களுக்கு மிகுந்த மதிப்பு கொடுக்கின்றனர். அவர்கள் ஆணாக இருந்தாலும் சரி, பெண்ணாக இருந்தாலும் சரி, வயதில் சிறியவர்கள் வேலைக்கோ அல்லது பாடியை விட்டு வெளியில் செல்லும் பொழுதோ பாடியின் பெரியவர்களிடம் போய்த் தலை குனிந்து வணங்குவர். உடனே பெரியவர் தம் கைகளை, அவர்கள் தலை மேல் வைத்து வாழ்த்துக் கூறுவார். சிலர் தங்களுடைய காலைத் தூக்கித் தலை மேல் வைத்து வாழ்த்துவதும் உண்டு. இந்தப் பழக்கம் இருப்பதால் ஒவ்வொரு பாடியிலும், பெற்றோர்கள் மிகவும் உயர்ந்த நிலையில் கவனிக்கப்படுகின்றனர்.

காட்டில் சிறுவயது முதல், பெரிய கிழவிகளைத் தாய் என்று அழைப்பதும், வணங்குவதும் கண்டு நான் வியப்படைந்தேன். சாதாரணமாய், 'தாய்' என்றே அழைக்கின்றனர். இக்கருத்தைக் கூறும் 'தாயிற் சிறந்தது ஒரு கோயிலும் இல்லை' என்ற ஔவையின் வாக்கியம்

நமக்கெல்லாம் தெரியும். ஆனால் நம்மில் எத்தனை பேர் காலையில் தாயை வணங்கி விட்டு வேலைகளைக் கவனிக்கிறோம்?

சிறுவர்களுடைய சண்டைகளையும், அவர்களுடைய நடத்தைகளையும் எல்லாரும் சேர்ந்து கவனித்துக் கொள்வதுண்டு. சிறுபிள்ளைகளுக்குள் சண்டை உண்டாவதுண்டு. அதே நேரத்தில் அங்கு யார் இருந்தாலும் சரி, 'அவன் பாடியின் பிள்ளை' என்று நினைத்து, சினத்தோடு பேசும் பிள்ளைகளைப் பெரியவர்கள், "ஆத்திரமாய்ப் பேசாதே; சினத்தை அடக்கு. இவ்வளவு சிறியவனுக்கு இவ்வளவு சினம் எப்படி வருகிறது" என்று கூறுவார்கள். அப்படி அடிக்கடி கோபம் வரும் பிள்ளைகளுடனும், சண்டை போடும் பிள்ளைகளைச் சேரவிடாமல் பெற்றோர்கள் பார்த்துக் கொள்வார்கள்.

தன்னுடன் யாரும் சேரவில்லை என்று ஒரு சிறுவன் தன் தாயிடம் கூறினால், அந்தத் தாய் உடனே, "ஆமாம்! நீ அடிக்கடி சண்டை போடுகிறாய். உனக்குச் சினம் வருகிறதாம். உன் அப்பா கூட உன்னைப் பக்கத்துப் பாடிக்கு அனுப்பிவிடப் போவதாகக் கூறிக்கொண்டே இருக்கிறார்" என்று கூறி அவனைத் திருத்திவிடுவாள். மேலும், கோபத்தால் தங்கள் மூதாதையர்களில் யார் யார் என்னென்ன தீமைகளை அடைந்தார்கள் என்பதைக் கதையாகச் சொல்லித் தம் பிள்ளைகளைத் தாய்மார் திருத்தி விடுகிறார்கள்.

நாகரிக நகரத்தில் வாழும் பெற்றோர்கள் பிள்ளைகளின் தன் முனைப்பையே ஊக்கப்படுத்து வதற்கும் இதற்கும் எத்தனை வேறுபாடு?

ஒரு சிறுவன் மற்ற பிள்ளைகள் மேல் ஏதாவது குறை கூறினால், உடனே அவன் தாய், தன் பிள்ளையின் மேலேயே குற்றத்தைச் சுமத்திப் புத்தி கூறுவதைக் கண்ட நான் ஆச்சரியமடைந்தேன். இதைத் 'தீராக் கோபம் போராய் முடியும்' என்று நம்முடைய ஔவை விளக்குகிறார்.

சில பாடிகளில் திருமணமே ஆகாத சில கிழவிகளைக் கண்டு ஆச்சரியமடைந்தேன். ஒவ்வொரு காட்டிலும் இப்படி இரண்டொரு கிழவிகள் இருப்பதைக் கண்டேன். குருவிக்காரர்களிடமும் சிலருள்ளர். 'ஏதோ திருமணம் செய்துகொள்ள விருப்பமில்லை போலும்' என்று நான் நினைத்துக் கொண்டேன். ஆனால் சேர்வராயன் மலையில்தான், என் கருத்துத் தவறு என்ற முடிவுக்கு வந்தேன்.

சிறுவயது முதல் பாடியில் வளரும் பெண்களை ஆண்கள் நன்றாகக் கவனிக்கின்றனர். அவ்வாறு பழகும்பொழுது ஒரு பெண் இரக்கமுள்ள உள்ளம் படைத்தவளா? அல்லது இல்லையா? என்பது அவர்களுக்கு நன்றாகத் தெரியும் அன்றோ? உள்ளத்தில் இரக்க குணம் பெண்களுக்கு மிகவும் தேவையென்று காட்டில் உள்ள மங்கையர்களும், ஆண்களும் கருதுகிறார்கள். ஏனென்றால், கணவனே ஏதாவது குற்றங்கள் செய்தாலும், நோயில் படுத்தாலும், குழந்தைகளுக்கு நோய் கண்டாலும் உதவி செய்ய வேண்டுமே! இரக்க குணம் பெண்களுக்கு இல்லாவிட்டால் அக்குடும்பத்தில் பெண்குல தெய்வங்களின் அருள் கிடைக்காது அன்றோ? இரக்க் குணம் இல்லாவிட்டால் பஞ்சாயத்திலும் தன் கணவனை ஆத்திரமாகப் பேசுவாளாம். இக்கருத்தை விளக்க நம்முடைய ஔவையார் மிகவும் அழகாக தீயோடு ஒப்பிடுகிறார். "துடியாப் பெண்டிர் மடியில் நெருப்பு" என்கிறார். மனத்திலே இரக்கமில்லாத பெண்கள் மடியிலே தீ இருப்பது போலாவர் - என்பதாம். என்னே காடர்களின் உயரிய பண்பும், அன்பும், அறிவும்!

காட்டில் ஆண்களும் பெண்களும் தங்களுடைய முன்னோர்களுடைய பொருளை வைத்துக்கொண்டு சாப்பிட மாட்டார்கள். ஒவ்வொருவரும் காடுகளுக்குச் சென்று, அன்றாடம் தங்களுக்கு வேண்டிய பொருளைச் சேகரித்துக் கொண்டு வருகிறார்கள்.

காட்டில் சோம்பேறியாக வீட்டிலிருந்து சாப்பிடும் ஆண்களையும், பெண்களையும் பார்த்து,, "ஏன்டா! பெரியவர்கள் தேடிவைத்த பொருளை வீணே திரிந்து கொண்டு செலவழிக்கிறாய்? உன்னுடைய பெரியவர்களுடைய சாபத்தால் கடைசிக் காலத்தில் நீ துயரத்தை அடைவாய்" என்று அந்தக் காட்டில் உள்ள பெரியவர்கள் அடிக்கடி அவர்களுக்கு அறிவுரை புகட்டுவார்கள். எங்குச் சென்றாலும் அவனைப் பார்க்கிறவர்கள் எல்லாரும் கூறும் திட்டுக்களைக் கேட்டு அவன் ஏதாவது ஒரு வேலை செய்யத் தொடங்கி விடுவான். இந்த நிகழ்ச்சியை அடிக்கடி காட்டில் நான் கண்டிருக்கிறேன். இதை நம்முடைய ஔவையார், "தேடாது அழிக்கின் பாடாய் முடியும்" என்று விளக்குகிறார். இவ்வாறு ஆதிவாசிகளுடன் தங்கிப் பழகினால்தான் அனைத்தும் புரியலாம். அவ்வாறின்றிக் காரில் சென்று அதைச் சாலையில் நிறுத்திவிட்டு அவர்களை அழைத்துப் பார்த்து விட்டு வரும் அதிகாரிகளுக்கு இவைகள் எல்லாம் எப்படி விளங்கும்? பல செய்திகளைக் கேட்டும் இருக்க மாட்டார்கள். 'கேட்டதில்லை' என்றும், பல அதிகாரிகள் கூறுவதைக் கேட்டுமிருக்கிறேன். இன்று நம்முடைய அரசாங்கம் மலைப்பகுதியில் வாழும் ஆதிவாசிகளுக்கும், பழங்குடி களுக்கும், மலை மக்களுக்கும் குளிர் மிகுதி என்று சிலருக்கு ஓட்டு வீடுகள் கட்டிக் கொடுக்கின்றனர். ஆனால் அவற்றிலே இவர்கள் வாழ விரும்புவதில்லை. அதற்குக் காரணம் புரிந்து கொள்ளாத நண்பர்கள் "குடிசையில் வாழ்ந்து வாழ்ந்து பழகியதால் ஓட்டு வீடுகளில் வாழ விரும்பவில்லை" என்று கூறுகிறார்கள். இது மிகவும் வருந்தத்தக்க செய்தியாகும்.

ஏன் இவர்கள் குடிசையில் வாழ விரும்புகிறார்கள் என்பதை ஆராய்ச்சி செய்தால், காரணத்தை அறியலாம். வைக்கோல் வேய்ந்த குடிசையில் குளிர் மாதங்களாகிய தை, மாசி மாதங்களிலும், மற்ற (மலைக்) குளிர் காற்று மாதங்களிலும் குளிர் மிகுதியாகத் தெரியாது.

குடிசைக்குள் கணகணவென்று இருக்கும். மேலும், ஏழைகளிடம் கம்பளிகள் கிடையா. வைக்கோல் வேய்ந்த குடிசையில் இருக்கும் கணகணப்பு ஓட்டு வீட்டில் இல்லை. இருக்காது என்பதையும் உணர்ந்தேன். மேலும் இரவில் தீ மூட்டி குடிசை முழுவதும் உண்டானதும் தீயை அணைத்து விடுகின்றனர். அந்தத் தீயினால் ஏற்படும் கணகணப்பு விடியும் வரையில் இருப்பதை நேரில் கண்டேன்.

மேலும், மலைப் பகுதியில் இன்றும் பல அதிகாரிகளுடைய வீட்டிலும், பெரிய ஓட்டல் விடுதிகளிலும், தேயிலை-காப்பி தோட்ட எஸ்டேட்டு அதிகாரிகளின் வீடுகளிலும், 'சிமினி' அடுப்பைப் படுக்கை அறையில் இரவு நேரங்களில் தீ மூட்டுவதைக் கண்டிருக்கிறோம். இவ்விதமான வசதிகள் ஆதிவாசிகளுடைய ஓட்டு வீடுகளில் இல்லை. மேலும் ஏழைகளுக்கு வைக்கோல் வேய்ந்த வீட்டின் சுகத்தை ஓட்டு வீடுகளில் காண இயலாது. இந்தச் சுகத்தை அறிந்து அன்று ஔவையாரும் நீதி நூலில் பாடியுள்ளார்.

"தையும் மாசியும் வையகத்து உறங்கு" என்பது அது. (வை + அகம் = வைக்கோல் வேய்ந்த வீடு) இக்கருத்தை விளக்கத் தெரியாத காட்டில் வாழும் அப்பாவிகள், "எங்களுக்குப் பிடிக்கவில்லை; எங்கள் குலதெய்வத்திற்குப் பிடிக்காது" என்றும் கூறுகின்றனர். இக்கருத்தை விளங்கிக்கொள்ளத் தெரியாத அதிகாரிகள் தங்கள் வாயில் வந்ததைக் கூறுகிறார்கள்.

காடுகளில் பயணம் செய்யும்போது நீர்த் தேக்கங்களின் அருகிலும், நீர் ஓடைகள் அருகிலும் நடந்து செல்லுங்கால் மிகவும் கவனமாக இருப்போம். ஏனென்றால் கொடிய விலங்குகள் தண்ணீர் குடிப்பதற்கும், தண்ணீர் குடிக்கவரும் விலங்குகளைப் பிடித்துத் தின்பதற்கும் வந்து பதுங்கிக் கொண்டு இருப்பது வழக்கம். ஆனால் ஆதிவாசிகள் தங்களுடைய குடிசைகளை அப்படிப்பட்ட நீர் நிலைகளுக்கு

அருகில்தான் கட்டிக்கொள்வதைக் கண்டு, காரணம் கேட்டதற்குத் தங்களது காரணம் கூறத்தெரியாத அப்பாவிகள், "தண்ணீரிருக்கும் இடங்களில்தான் தேவதையும் தணிந்து வாழ்வாள். இல்லாவிட்டல் கோபாவேசமாக வாழத் தொடங்கி விடுவாள்" என்று எதையோ கூறுகிறார்கள். அதாவது 'மக்களுக்கு வேண்டிய பொருள்களில் முதன்மையானது தண்ணீரன்றோ? ஆகையால் நீர்வளம் வேண்டும் வாழ்வதற்கு என்று கூறியுள்ளார். அதை விளக்கத் தெரியாத காடர்கள், குலதெய்வம் கூறியதாக விளக்குகிறார்கள்.

காடர்கள் எந்தக் காரியம் செய்தாலும் சரி, தாங்கள் செய்யப்போகும் காரியத்தை நன்றாக யோசித்து, நிதானமாகச் செய்யும் இயல்புடையவர்கள். காட்டில் தேனைக் கண்டதும், உடனே அதை எடுத்துவிட மாட்டார்கள். அந்தத் தேனைச் சுற்றியோ அல்லது அந்த மரத்தின் அடியிலோ ஏதாவது பெருக்கல் குறி இருக்கிறதா என்று கவனிப்பார்கள். அவ்வாறு எந்த அடையாளமும் அந்த இடத்தில் இல்லை என்று தெரிந்ததும் உடனே இவர்கள் இரண்டு கொம்புகளை எடுத்து, அந்தத் தேன் கூடு இருக்கும் மரத்தின் கீழ்பெருக்கல் குறியைப் போல் காட்டு நார்களைக் கொண்டு கட்டி வைப்பார்கள். இரண்டு மூன்று நாட்களுக்குப் பின் நான்கு ஐந்து பேர்களுடன் வந்து அந்தத் தேனை எடுப்பார்கள். இந்தப் பெருக்கல் குறியை மற்றவர்கள் யார் பார்த்தாலும் சரி, அந்தத் தேனை எடுக்க மாட்டார்கள். மற்றவர்கள் எடுக்காமல் இருக்கத்தான் இவ்வித ஏற்பாடுகள் செய்கின்றனர். மேலும் வேட்டைக்குச் சென்றாலும் சரி, விலங்குகளைக் கண்டதும் உடனே துப்பாக்கியால் சுடவோ அல்லது அம்பு தொடுக்கவோ மாட்டார்கள். விலங்குகளைக் கண்டதும் தாங்களும் பதுங்கி விடுகிறார்கள். தாங்கள் வேட்டையாடுவதால் எதிர்ப்பக்கங்களில் இருக்கும் மற்றவர்களுக்கோ, ஒற்றையடித் தடங்களில் வருபவர்

களுக்கோ துன்பம் ஏற்படக் கூடாதன்றோ? எனவே, அக்கம்பக்கத்தில் கவனித்த பிறகுதான் சுடுவார்கள்; அல்லது மூங்கில் அம்பு விடுவார்கள். நினைத்ததும் ஒரு காரியத்தை வேகமாகச் செய்துவிட மாட்டார்கள். எந்தக் காரியம் செய்தாலும் சரி எண்ணிப் பார்த்தே செய்வார்கள். இதை கொன்றை வேந்தன், "நுண்ணிய கருமமும் எண்ணித் துணி" என்று கூறுகிறது. அதாவது, செய்யும் எந்தத் தொழிலையும் நன்றாக முன்னால் எண்ணிப் பார்த்தே செய்ய வேண்டும் என்று கூறுகிறது.

சில பாடிகளில் வாழும் பழங்குடிகள், "எங்கள் பாடியில் ஒரு வாரம் காப்புக் கட்டிய விரதம்" என்று கூறுவார்கள். அவர்கள் கூறிய பொழுது எனக்கு சற்றுக் கவலையாக இருந்தது. ஏனென்றால் விரதம் என்றால் சாதாரணமாய் எங்கள் குடும்பத்தில் ஒரு வேளை சாப்பாடு சாப்பிடுவோம்: இரவில் ஏதாவது பலகாரம் செய்வார்கள். இது சாதாரணமாய் எங்கள் குடும்பங்களில் வாரத்திற்கு ஒரு நாள்தான் உண்டு. ஆனால் பழங்குடிகளிடம் ஒரு வாரத்திற்கு "விரதம்" என்று கேள்விப்பட்டதும் எனக்கு கவலையாக இருந்தது. ஏனென்றால் ஒரு வாரத்திற்கு ஒரு வேளை உணவு சாப்பிட்டு விட்டு எப்படிக் காடுகளைச் சுற்றுவது என்ற கவலையே. இப்படிக் கவலையுடன் இருந்தபொழுது மறுநாள் காலையில், சிற்றுண்டிக்குப் பதிலாகப் புளிச்சோறும் மோரும் கொண்டு வந்து கொடுத்து என்னுடன் அவர்களும் உட்கார்ந்து சாப்பிட்டார்கள்.

நான் சாப்பிட்டுக் கொண்டே, "என்னால் உங்களுடைய விரதத்தை முறித்து விட்டீர்கள் போலும்" என்று கேட்டேன். "இல்லையே! விரதத்துடன் தான் இருக்கிறோம். மூன்று வேளையும் நன்றாகச் சாப்பிடுவோம்" என்று கூறினார்கள். "ஓ அப்படியா! விரதம் என்பதை நீங்கள் எப்படி அனுசரிக்கிறீர்கள்?' என்று கேட்டேன்.

"நாங்கள் இந்த ஒரு வாரத்தில் வேட்டைக்குப் போக மாட்டோம். எந்த உயிரையும் கொலை செய்ய மாட்டோம். இந்த ஒரு வாரத்திற்குச் சைவ சாப்பாடுதான் சாப்பிடுவோம். இதைத் தான் எங்கள் பேச்சு வழக்கில் 'விரதம்' என்று கூறுகிறோம்" என்று விளக்கினார்கள். இந்த விரதத்தைக் கேட்டதும், கல்வி கற்காத காடர்களிடமாவது இந்தக் கட்டுப்பாடு இருக்கிறது. ஆனால் கல்வி கற்ற நம்மிடம் எந்தக் கட்டுப்பாடும் இல்லையே என்று வருந்தினேன். ஏனென்றால், வெள்ளிக்கிழமை என்பது எல்லா மதத்தினர்களுக்கும் உகந்த நாள். ஏன், உலகம் முழுவதுமே அந்த நாளைப் போற்றுகிறார்கள். ஆனால் நகரங்களில் இருக்கும் கடைத்தெருவில், அந்நாளில் இறைச்சி வராமலா இருக்கிறது? வெள்ளிக்கிழமைகளில் மட்டும் எந்த உயிர்களையும் அறுக்கக் கூடாது என்ற சட்டம் பிறந்தால் ஓர் ஆண்டில் ஐம்பத்து இரண்டு வெள்ளிக்கிழமைகளில் எத்தனை கோடி உயிரினங்கள் பெருகும் என்பதை எண்ணிப் பாருங்கள். 'கற்றவர்களைவிடக் கல்லாதவர்களே நல்லவர்கள்' என்று சில பெரியார்கள் கூறியது எவ்வளவு பொருத்தமாக இருக்கிறது. இதைத்தான் ஒளவையாரும், "நோன்பு என்பது கொன்று தின்னாமை' என்று விளக்குகிறார். அதாவது உயிர்களைக் கொன்று தின்னாதிருப்பதே சிறந்த விரதம் என்று கூறுகிறார்.

"கல்லாத பேர்களே நல்ல பேர்கள் நல்ல பேர்கள்" என்றார் தாயுமான அடிகள். தமிழ்நாட்டில் வாழும் பழங்குடிகள்தான் இப்படி இருக்கிறார்களா? அல்லது இந்தியாவில் வாழும் எல்லோருமே பண்புடன் வாழ்கிறார்களா? என்ற ஐயம் நம்மில் பலருக்குத் தோன்றலாம். ஆந்திராவில் வாழும் ஏனாதியர், செஞ்சூஸ் என்ற பழங்குடிகளைக் காணச்சென்றேன். அவர்கள் காடுகளையும், மலைகளையும் அழித்து நெல், கோதுமை, ராகி, சோளம் முதலியவற்றைப் பயிர் செய்கின்றனர். எல்லாப் பயிர்களும் நன்றாகச் செழித்து வளர்ந்திருந்தன. ஆனால், ஒரு வயலில் மட்டும் பயிர் சற்று வாட்டமாகவும், செழிப்பற்றுமிருந்ததைக்

கண்டேன். செழித்து இருந்த மற்ற வயல்களையும், வாட்டமாக இருந்த அந்த வயலையும் மாறி மாறிக் காண்பதைக் கண்ட ஏனாதி, “என்ன ஐயா, அந்த வயலையும், இந்த வயலையும் சும்மா சும்மா கவனிக்கிறீர்கள்? இந்த வயலிலிருந்துதான், மற்ற வயல்களுக்குத் தண்ணீர் போகிறது. ஆனால், அவன் வயலில் இருக்கும் பயிர்கள் மட்டும் இப்படியிருக்க அவன் செய்த பாவம்தான் காரணம். மனத்தைப் போல்தான் மாங்கல்யம் என்று பெரியவர்கள் கூறுவதைப் போல ஒருவன் நல்லவன், கெட்டவன் என்று இதில் தெரிந்துவிடும்” என்று கூறினான். தமிழ் தெரியாத ஏனாதிய மக்கள் இங்ஙனம் கூறியதைக் காணும்பொழுது, எனக்கு உடனே, ‘பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்’ என்ற ஔவைப்பாட்டியின் அறிவுரை நினைவுக்கு வந்தது. அதாவது, புண்ணியவானா? பாவியா? என்று ஒருவனைக் கண்டறிய வேண்டுமாயின், அவனுடைய பயிர் விளைவினாலே கண்டு அறியலாம் என்கிறார்.

வயல்களைக் கண்டபின், மறுநாள் செஞ்சூஸ் மங்கையர்களின் நடனங்களைக் காண அவர்களின் மலைகளுக்குச் சென்றேன். தலைசீவி, தங்களுடைய புடவைகளை இடுப்பில் அள்ளிச் சேர்த்துக் கட்டிக்கொண்டு, வரிசை வரிசையாக நின்று ஒருவரை ஒருவர் சேர்த்துப் பிடித்து நடனமாடும் காட்சியைக் கண்டேன்.

அப்படி ஆடிய மங்கையரில் ஒருத்தி மிகவும் அச்சப்பட்டவளாகக் காணப்பட்டாள். “பாவம், அவள் நிரம்ப அச்சமுடையவள் போலும்” என்று கூறினேன். உடனே செஞ்சு, “நன்றாகச் சொன்னீர்கள். அவள் அப்படித்தான் இருப்பாள்; மிகவும் சாது; ஆனால் சில ஆண்டுகளுக்கு முன் அவள் காட்டில் விறகு வெட்டச் சென்றபோது திடீரென்று அவள் மேல் புலி பாய்ந்தது. அவள் என்ன செய்தாள் தெரியுமா? விறகு வெட்ட வைத்திருந்த கோடரியினால் ஓங்கி அதன் தலையில் அடித்தாள் அவ்வளவுதான்! புலியின் தலை இரண்டாகப் பிளந்து விட்டது. ஆனால் புலி பாய்ந்த

வேகத்தில் அவள் உடலில் பல இடங்களில் நகங்கள் கீறி விட்டன. அந்த அதிர்ச்சியில் சில நாட்கள் காய்ச்சலாகப் படுத்துவிட்டாள்" என்று கூறினான்.

இவைகளைக் கேட்டதும், உடனே அவளை அழைத்து சிறிது நேரம் பேசினேன். அவள் பேசுவதைக் கேட்டாலும் ஓர் அப்பாவியைப்போல் தான் இருக்கிறாள். ஆனால், காலமும் நேரமும் வந்தால், பெண்கள் சிங்கத்தைப்போல் வீரத்தைக் காட்டுவார்கள் என்று பெரியவர்கள் கூறியது பொய்யாகுமா? இதைக் கொன்றைவேந்தனில் நன்றாகப் படம்பிடித்துக் காட்டுகிறார் ஔவை; 'பேதமை என்பது மாதர்க் கணிகலம்.' அதாவது எல்லாம் அறிந்தும், அறியாதவர் போல அடக்கமாயிருக்கும் 'மடமை' பெண்களுக்கு அணிகலன் போல் அழகு செய்வதாம்.

பொள்ளாச்சி ஆனைமலைப் பகுதிகளில் அடர்ந்த காடுகள் இருப்பது எல்லோருக்கும் தெரியும். அங்குதான் 'காடர்கள்' என்னும் மக்கள் வாழ்கிறார்கள். காட்டில் வாழ்வதால் அவர்களுடைய இனம், 'காடர்கள்' என்று பெயர் பெற்றுவிட்டது போலும்!

இந்தப் பகுதியில் பலவித பயிரை பயிராக்கி இருக்கிறார்கள். தண்ணீர் ஓட்ட வசதி இல்லாத அவர்கள், 'மழை நடனப் பாட்டு' என்று பாடிக்கொண்டே நடனமாடுகிறார்கள். அதாவது தங்களுடைய கைவளையல்களை ஒடித்து முறத்தில் போட்டுச் சிலரும், சிலர் தங்கள் முன்றானையை முறம் போல் பிடித்துக் கொண்டு, வானத்தைப் பார்த்து மழை பகவானை அழைப்பதைக் கண்டேன். அவர்கள் பாடிய சிறிது நேரத்திற்கெல்லாம் மழை பெய்வதைக்கண்டு வியப்படைந்தேன். அவர்களின் சக்தியும் பக்தியும்தான் என்ன! மழையில்லாவிட்டால் பயிர்கள் கருகிக் கெட்டுவிடும் என்று தெரிந்தால், அப்பொழுதுதான் இந்த நடனத்தை ஆடுகிறார்கள். காடத்திகள் வட்டமாக நின்று முன்றானையைப் பிடித்து ஆடும் காட்சியைக் காணலாம். இதை ஔவையும், 'மாரியல்லது

காரியமில்லை' என்கிறார். காடர்கள், "எல்லாக் காரியமும் மழையால்தான் எங்களுக்கு உண்டாக வேண்டும். ஆகையால், எங்களுடைய முன்னோர்கள் மழைக்கு என்று தனிப்பாடலும் நடனமும் ஏற்படுத்தி விட்டார்கள்" என்று கூறுகிறார்கள்.

பழங்குடிப் பெண்கள் மிகவும் மிடுக்காக வயல் வேலைகளுக்குப் போகமாட்டார்கள். மினுக்காக இருப்பவர்களைக் காணமுடியாது. அப்படி யாராவது தளுக்கு உடையணிந்து, மினுக்குவதைக் கண்டால், மற்ற மங்கையர்கள் அவளைக் கண்டு, "உம், இப்பொழுது மினுக்குவதேல்லாம், பின்னால் மழையாகக் கொட்டப் போகிறது" என்று கூறுகிறார்கள. இதன் கருத்தை என்னால் முதலில் அறிந்துகொள்ள முடியவில்லை. ஏனென்றால், 'மின்னுக்கெல்லாம் பின்னுக்கு மழை' என்று கொன்றை வேந்தன் கூறுவதைக் கேட்டுத் திகைத்ததுண்டு. ஆனால், இரண்டாவது முறையாக அந்தக் காட்டுக்குச் சென்றபோது காரணம் கேட்டுத் தெரிந்து கொண்டேன்.

"முன்னால் மினுக்குச் செய்யும் பெண்கள் பின்னால் கண்ணீர் மழை கொட்டுவார்களாம். காரணம், இவளுடைய மினுக்கின்மேல் கணவன் ஐயமுறத் தோன்றலாமாம். அல்லது குழந்தைகளின் நோயாலும் கண்ணீர் கொட்ட நேரிடுமாம். அல்லது கணவனுடைய நோயோ அல்லது கவலையோ பின்னுக்குக் கண்ணீர் சிந்த நேரிடலாமாம். ஏதோ ஒரு காரணத்தைக் கொண்டு எங்கள் பெண் தெய்வம் கண்ணீரைக் கறந்து விடுவாள்" என்று கூறுகிறார்கள்.

'முன்னுக்கு மேகத்தில் தோன்றிய மின்னலினால் பின்னுக்கு மழை பெய்தலை உறுதியாக நம்பலாம்' என்ற கருத்தை இவர்கள் கருத்து வேறுபாட்டுடன் பொருத்திக் கூறுவதைக் கண்டு வியப்படைந்தேன்.

காடர்கள் எதற்கும் கவலைப்படாமலும், எந்தப் பொருளையும் பற்றி இல்லை என்று குறைப்படாமலும்

இருக்கக் காரணம் என்னவென்றால், ஒவ்வோர் ஆணும் பெண்ணும் தொழில் செய்வதில் வல்லவர்கள். நீலகிரியில் வாழும் பழங்குடிகளிடம் பழகிய நம் பெண்களும் தங்கள் ஓய்வு நேரங்களில் தோட்டத்தில் நன்றாக வேலை செய்வதைக் கண்டேன். காடர்கள் உப்பு, எண்ணெய் வகைகளுக்காகத்தான் தங்கள் மலையை விட்டுக் கீழே இறங்குகிறார்கள். மற்றபடி அவர்கள் இருக்குமிடங்களுக்குத்தான் நாம் போக வேண்டும். காரணம் 'மேழிச் செல்வம் கோழை படாது' என்பதைப் போல, பயிர்த் தொழில் செய்கிறவர்களுக்கு என்றும் குறைவு ஒன்றும் இல்லை என்பதாம்.

நம்மிடம் காடர்கள் சாதாரணமாகப் பேசமாட்டார்கள். அவர்கள் பேசவில்லை என்பதால் அவர்களுக்கு ஒன்றும் தெரியாது என்றும் நாம் நினைத்து விடக்கூடாது. உண்மையில், அவர்கள் பல செய்திகளையும் நன்றாகத் தெரிந்திருக்கிறார்கள். தெரிந்தும், அவர்கள் அடக்கமாக வாய்திறவாமல் இருந்து நாம் பேசுவதை எடைபோட்டுவிட்டு, தங்களுக்குள் பின்னால் பேசுவதைப் பல காடர்களிடம் நான் கண்டதுண்டு. 'மோனம் என்பது ஞான வரம்பு' என்பதைப் போல் பேசாமல் இருப்பதே அறிவு உள்ளவர்களுக்கு அறிகுறி என்பதை எவ்வளவு அழகாகக் கடைப்பிடிக்கின்றனர் என்பது இதிலிருந்து புலனாகும்.

காட்டில் வாழும் பழங்குடிகள் தங்கள் பாடியில் துணிவுள்ளவனாகவும், வீரனாகவும், வலிமையுள்ள வனாகவும் ஒருவன் இருந்தால், அவனுக்கு பெண்ணைப் பக்கத்துப் பாடியில் தேடவிட மாட்டார்கள். ஏனென்றால் வீரன் தன் பாடியிலிருந்து போய்விட்டால், தைரியலட்சுமியும் அந்தப் பாடிக்குக் குடிபோய் விடுவாளாம். ஆகையால் அவனுக்குத் தங்கள் பாடியிலேயே பெண் கொடுப்பார்கள். பெண்களையும் தைரியக்காரி என்று தெரிந்தால், அந்தப் பாடியில் இருக்கும் இளைஞனே திருமணம் செய்து கொள்வான். இக்கருத்தைக் கொன்றை வேந்தன் படம் பிடித்துக்

காட்டுகிறது. 'வீரன் கேண்மை கூரம்பாகும்.' அதாவது வீரனுடைய நட்பும் வாழுமிடமும் ஓர் பாடியில் (ஊரில்) இருந்தால் அது அவ்விடத்தில் பகைவர்கள் நெருங்காமல் காத்தற்குரிய கூரிய அம்புக்கு ஒப்பாகுமாம்.

அறுவடைக் காலங்களில் ஒருவருக்கொருவர் ஒரே வயலில் வேலை செய்து வயல் சொந்தக்காரனுக்கு உதவி செய்வார்கள். ஆனால் அதற்காக ஒருவரும் கூலி வாங்க மாட்டார்கள். எல்லாரும் ஒரே குலம் என்பதை உணர்ந்து, வயலில் காப்பி காய்ச்சி அதை மட்டும் எல்லாரும் அருந்துகிறார்கள். அயலார்கள் வேலை செய்தால் மட்டும் கூலி கொடுக்கின்றனர். 'உரவோர் என்கை இரவாதிருத்தல்' என்பதைப் போல் பிறரிடத்துச் சென்று கெஞ்சாமல் இருப்பதே பெருந்தன்மையானது என்று வாழுகின்றார்கள். பழங்குடி மக்கள் இயற்கையாகவே எதையும் மறைத்துக்கொள்ள வேண்டும் என்றும், எதையும் அபகரிக்க வேண்டும் என்றும் சிந்திப்பது இல்லை. என் பணப்பையைப் பற்றிக் காட்டில் கவலை இல்லாமல் இருந்ததைப் போல், நான் பட்டணங்களின் கடைத் தெருவில் உலவ முடியுமா? மேலும் காடர்களின் முகங்களே, அவர்களுடைய வெள்ளை உள்ளத்தை நன்றாகக் காட்டிவிடும். ஆனால் நாம் எந்த நோக்கத்துடன் காடுகளுக்கு வந்துள்ளோம் என்பதை மங்கையர்கள் மிக விரைவில் தெரிந்து கொள்ளும் ஆற்றல் உடையவர்கள்.

நீலகிரியில் பெஞ்சு, நாற்காலி, விறகு, வெந்நீர் காயவைக்கும் பாத்திரம் முதலிய பொருள்கள் இராக்காலங்களில் வெளியில்தான் இருக்கும். அதை யாரும் திருட வேண்டும் என்ற எண்ணமே இல்லாதவர்களாய்ப் போவார்கள், வருவார்கள். ஆனால், அவ்வாறு பட்டணங்களில் வாழ முடியுமா? பழங்குடிகளைக் கேட்டதற்கு, 'அவைகளைத் திருடுவானேன். திருட்டு விழி விழிப்பானேன்' என்று கூறுகிறார்கள். இதை ஔவையார் மிகவும் அழகாகக் கூறுகிறார்.

'வெள்ளைக் கில்லை கள்ளச் சிந்தை'. அதாவது தூய்மை உள்ளமுடையவர்களுக்குக் கள்ள நினைப்பு இல்லை என்பதாம்.

ஒவ்வொரு காட்டிலும், ஒவ்வொரு பாடியிலும் தலைவன் மூப்பன்மார்கள் கட்டாயம் இருக்கிறார்கள். பூசாரியும் இருக்கிறார். பஞ்சாயத்தில் நன்றாகப் பேசக் கூடியவர்களும் இருக்கிறார்கள். அவர்களிடம், அந்தக் காட்டில் வாழும் மக்கள் பகைமையைத் தேடிக்கொள்ள மாட்டார்கள். தலைவனும், மூப்பனும் கூட நேர்மைக்கு எதிராக நடந்துகொள்ளமாட்டார்கள். இவைகளைப் பற்றி நான் பல காடர்களிடம் கேட்டதற்கு, "மூப்பனையும், தலைவனையும், பூசாரியையும் பகைத்துக் கொண்டால், நம்முடன் மற்றவர்கள் பேசவும், பழகவும், பஞ்சாயத்தில் ஒரு விவகாரத்தில் நம் பக்கத்தில் சார்ந்து பேசவும் துணையாக யாரும் இருக்கமாட்டார்கள். ஆகையால், எவரும் வீணாகப் பாடித் த்லைவனையும், மூப்பனையும், பூசாரியையும் பகைத்துக் கொள்ளமாட்டார். அவர்களிடம் இணக்கமாகப் போய் விடுவோம்' என்று கூறினார்கள். இக்கருத்துக்களை விளக்கும் வகையில் பல்லாண்டுகளுக்கு முன் பாடிவிட்டார் ஔவையார். 'வேந்தன் சீறின் ஆந்துணையில்லை.' அதாவது அரசன் ஒருவனைச் சினந்து பேசுகையில், குற்றவாளிக்குத் துணையாக நின்று உதவி பேசக்கூடியவர்கள் ஒருவருமில்லையாம்.

நம் முன்னோர் கூறியதைப்போல், 'கற்றவர்களைக் காட்டிலும் கல்லாதவர்களே உயர்ந்தோர்' என்பதை, அதாவது எதிலும் நேர்மையாக நிற்பவர்கள் என்பதைக் கொண்டு, இன்னும் பக்கம் பக்கமாக எழுதலாம்.

